(இரந்துபின்னிலைநிற்றல்.)

செறிவேழவெஞ்சிலைவேடஞ்சைவாணன் றிருந்தலர்மே... ...
லெறிவேலைவென்றகண்ணென் னுயிர்க்கேவியிருண்டறல்போ
னெறிவேயலங்கன்முடிற்றலைசாய்த்திங்ஙனிற்பதுதா ... ..
னறிவேயறிந்தவுனக்கலர்மாளிகையாரணங்கே... ... ...

(முன்னிலையாக்கல்.)

வழுதியர் நாமம்வளர்க்கின்றவாணன்றென்மாறைவண்டு...
பழுதியலார்செய்குழன்மடவீர்நுங்குற்றேவல்செய்து ...
தொழுதியலாயத்தொருதியொடாடிச்சுனைதுடையா ... ...
தெழுதியபாவையைப்போனின்றவாறென்னியம்புமினே... (எ)

(மெய்தொட்டுப்பயிறல்.)

நல்லார்விழிபோலிருந்துமளியெனுநாமம்பெற்று... ... ...
மல்லார்குழலிலமர்ந்திருந்தாலமராவெல்ல... ... ... ...
வல்லான்வடமாதுபன்வாணன்றென்மாறைமதுகரங்கா... ...
ணில்லாதிடையுமக்கோபழிசாலநிலைநிற்குமே... ... ... (அ)

(பொய்பாராட்டல்.)

பருந்தொன் றுகூரிலைவேற்படைவாணன் மௌப்பூஞ் ...
செருந்தென்றுசோலைத்தென்மாறை ர் செழுந்திங்களு
முருந்தொன் றுகோபமுநக்கண்டுநாண மவத்தீர் [கண்
மருதொன்றுநாடியன்றேவடமேருவலங்கொள்வதே ... (கு)

(இடம்பெற்றுத்தழால்.)

படம்பட்டவாளரவல்குலிலேதளைபட்டநெஞ்சம்... ... ...
விடம்பட்டவாள்பட்டவேதனைதீரவின்றோய்பொழிலுந் ...
தடம்பட்டவாவியுஞ்சூழ்தஞ்சைவாணன்றமிழ்க்கிரிநா... ...
மிடம்பட்டவாரமுலைத்தடந்தோய்தற்கிடமிதுவே... ... (௰

(வழிபாடுமறுத்தல்.)

தேறுதெவ்வென்றவாணன்றென்மாறைச்செந்தேனருவி...
யூறுதகாலத்துஞூறுதண்சாரலொதுக்கிடந்த... ... ...
தாறுதசோகமுமாற்றுதல்வேண்டுமசோகமெய்தி... ...
மாறுததண்ணளிசூர்மர்வாண்முகமாதவியே... ... ... (௰௧

(இடையூறுகிளத்தல்.)

சிதைபாமுளரித்திருமாளிகையிற்சிறந்ததென்றென்... ...
னிதயாரவிந்தத்தினிதிருப்பீரிருகோட்டொருகை... ... ...
மதயானைவாணன்வருந்தஞ்சைசூழ்வையைநாட்டுறைவோர்
புதயார்தனமென்பதோமதர்வேற்கட்புதைத்ததுவே . (௰௨

(நீடுநினைந்திரங்கல்)

தமிழ்தங்கியதஞ்சைகாவலன்வாணன்றடஞ்சிலம்பிற் ... ... ※
குமிழ்தங்கியமதிக்கொம்பரன்னீர்குளிர்வெண்ணிலவூ ... ... ※
டுமிழ்தண்டரளப்பவளச்செங்கேழ்வள்ளத்துள்ளிருக்கு ... ※
மமிழ்தந்தருவதென்றேபெருவேட்கையென்னாருயிர்க்கே (௰௩)

(மறுத்தெதிர்கோடல்)

கறையாரிலங்கிலைவேலன்பர்காமக்கடற்கெதிர்ந்த ... ... ...※
நிறையாம்வரம்பினினிற்பதன்றுனிறைநீருலகை ... ... ※
மறையாமல்வன்கலிமாற்றியாணன்றென்மாமறையினும் ... ...※
பொறையார்தவஞ்செய்திலேநெஞ்சமேயென்புகல்வதுவே ...()

(வறிதுநகைதோற்றல்)

எறிதேனலம்புஞ்சிலம்பினெட்போதுமிரந்திவள்பின் ... ...※
வெறிதேதிரிந்துமெலிந்தனநாமுள்ளமெல்லியற்குப் ... ... ※
பிறிதேகொலென்னும்பெருந்தகைதேறப்பெரிதுயிர்த்து ... ※
வறிதேமுறுவல்செய்தாடஞ்சைவாணன்வரையணங்கே ... (௰௫)

(முறுவற்குறிப்புணர்தல்)

வின்மலைவேலன்னநன்னுதல்வாட்கண்ணிவேட்கையென்னு ※
ளென்மலைவேனென்னுமென்னுயிர்தாங்கு மெதிர்ந்தவொன்னார்
மன்மலைவேழந்திறைகொண்டசேய்தஞ்சைவாணன்மஞ்சார் ...※
தென்மலைவேய்நிகரும்பெருந்தோளிசிறுநகையே ... ... (௰௬)

(முயங்குதலுறுத்தல்)

வானக்கதிரவன்மண்ணகமாதைதமணந்ததன்றே ... ... ...※
நானக்குழலியைநானின்றுபெற்றதுநாவலர்க்குத் ... ... ※
தானக்களிறுதரும்புயல்வாணன்றமிழ்த்தஞ்சைசூழ் ... ...※
கானக்கடிவரைவாய்விரைநாண்மலர்க்காவகத்தே ... ...(௰௭)

(புணர்ச்சியின்மகிழ்தல்)

மலைநாடுகொண்டவழுதிகண்போல்பவன்வாணனெண்ணெண் ※
கலைநாடுதஞ்சையர்காவலன்மால்வரைக்கன்னிபொன்னாண் ... ※
முலைநாமுயன்றுமுயங்கினமான்முயன்றலினியைந் ... ... ...※
தலைநாகநன்மணியும்பெறலாமித்தரணியிலே ... ... ... (௰௮)

(புகழ்தல்)

திரண்மாமரகதச்செய்குன்றுகாளென்றுஞ்செவ்வனநீர் ........※
முரண்மாதவங்கண்முயன்றுசெய்தாலுமுளரிமங்கை ... ... ※
சரண்டாறைவாணன்றமிழ்த்தஞ்சைநாட்டென்றனியுயிர்க்கோ ※
ரரண்மானனையகண்ணாள்கொங்கைபோறலரிதுமக்கே .....(௰௯)

இயற்கைப்புணர்ச்சிமுற்றிற்று.

(அணிந்துழிநாணியதுணர்ந்துதெளிவித்தல்)

நாவியுஞ்சாரலிலாவியுந்தோய்குழலணியஞ்சேல் ... ... ... *
வாவியுஞ்சோலையுஞ்சூழ்தஞ்சைவாணன்றென்மாறைவயற் ... *
காவியுஞ்சேலுங்கமலமுங்காட்டுநின்கண்மலரு ... ... ... ...*
மாவியும்போலினியாரணியாகவணிந்தனனே ... ... ... ()

(பெருநயப்புரைத்தல்)

மன்னுலகைத்தாமன்னியசீர்த்தஞ்சைவாணன்வெற்பி... ... ...*
லென்னுயிரன்னவிவளிடைமேலிணைகொண்டெழுந்த ... [போ
பொன்னணிகொங்கை போலவண்மருங்கள் பொய்கையுண்
நன்னளரும்பொருதாளிரண்டனாளினங்களே ... ... (௨௧)

(தெய்வத்திறம்பேசல்)

மன்னியபார்புகழ்வாணன்றென்மாறையின்மாந்தளிர்போன் ...*
மின்னியமாமைவிளர்ப்பதென்னேவிதிகூட்டநம்மிற்... ... *
பின்னியகாதற்பிரிப்பவர்யாரினிப்பேரருவி... ... ... ...*
யின்னியமாகவிளமயிலாடிரும்பொழிற்கே ... ... (௨௨)

(பிரியேனென்றல்)

வண்கொடியெய்ம்மறன்மாறைவரோதயன்வாணனென்ற ......*
வொண்கொடிபோன்மனைத்தவிவ்வண்ணநீபிரந்தேலிரங்கே ... ...*
ளுண்கொடியேரிடைவண்டிமிர்பூங்குழனூபுரத்தாட் ... *
பெண்கொடியேபிரியேன்றறியேனிற்பிரியினுமே ... (௨௩)

(பிரிந்துவருகென்றல்)

சென்றேபகைவென்றதிண்படைவாணன்செழுந்தஞ்சைசூழ் *
நன்றேதருவையைநாடனையாய்நமதுயிர்போ ... ... *
லொன்றேயெனதுறையூங்குயர்சோலையினூடொளித்து... ...*
நின்றேவருவலிக்கேவிளையாடுகநீயிறிதே ... ... ... ...()

(இடமணித்தென்றல்)

மணிபொன்சொரியுந்தஞ்சைவாணன்றென்மாறைமருவினர்போற்*
றணிபொன்சொரியுந்தடமுலையாயுயர்சந்தமுந்தி ... ... *
யணிபொன்சொரியுமருவியெஞ்சாரலகத்ததென்றேங் ... ...*
கணிபொன்சொரியுநின்சாரன்மென்காந்தளங்கையகத்தே (௨௫)

வன்புறைமுற்றிற்று.

[தெளிவு:]

எத்துந்தமதுரைதேறிநின்றேனையிற்றேதனியே... ... ..*
வைத்தங்ககன்றமறந்துறையார்வதிமையார்சவர ... ... ...*
முத்துந்துகிருமிரக்குந்தவங்கமுகந்தெறிந்து... ... ... *
தத்துங்கலாவையைசூழ்தஞ்சைவாணன்றமிழ்வெற்பரே...(௨௬)

தெளிவுமுற்றிற்று.

(செல்லுங்கிழத்திசெலவுகண்டுளத்தொடுசொல்லல்)

அகிலேந்துகூந்தலொருகையிலேந்தியசைந்தொருகை........*
துகிலேந்தியேந்துதுணைச்சிலம்பார்ப்பத்துளிகலந்த ... ...[யி
முகிலேந்துபூம்பொழில்சூழ்தஞ்சைவாணன் முந்நீர்த்துறைவா
நகிலேந்துபூங்கொடிபோற்செல்லுமானெஞ்சநம்முயிரோ (௨௭)

(பாகனொடுசொல்லல்)

தென்பாற்றிலகமன்னன்றஞ்சைவாணன்றென்மாறைமுந்நீர் *
வன்பாற்றிரண்டூழ்த்தவண்டலின்மேல்வருமேதமஞ்சி ... ...*
முன்பார்த்தென்னெஞ்சம்வரும்வழிபார்த்துமுறைமுறையே *
பின்பார்த்தொதுங்குதல்காண்வலவாவொரும்பெண்ணணங்கே ()

பிரிவுழிமகிழ்ச்சிமுற்றிற்று.

[பிரிவுழிக்கலங்கல்]

(ஆயவெள்ளம்வழிபடக்கண்டிதுமாயமோவென்றல்.)

ஈயங்கொலோவெனத்தெவ்வென்றவாணன்றென்வாறைவையைத்
தோயங்கொலோவெனுநேயநம்பால்வைத்துச்சோலைமஞ்ஞை *
யாயங்கொலோவெனுமாயத்துள்ளாளிவ்வரிவையென்ன ... ...*
மாயங்கொலோநெஞ்சமேமணம்போலிக்குவந்துற்றதே...(௨௯)

(வாயில்பெற்றுய்தல்)

பெருமான்மருந்தொன்றுபெற்றனம்யாநெஞ்சம்பேதுறல்பார்*
மருமான்வமோதயன்வாணன்றென்மாறைமணங்கமழ்பூந்......*
திருமான்முகமலர்ச்சேயரிபாய்கயல்சென்றுசென்றவ் ... ... *
வொருமானைமுகமாமலரோடையுள்ளாவருமே ... ... ...(௩௰)

(பண்புபாராட்டல்)

மயலார்களிற்றண்ணல்வாணன்றென்மாறையில்வாய்த்தவர்கண் *
கயலாமெனிற்கயல்கள்ளங்கொள்ளாகருந்தாழளகம் ... ... ...*
புயலாமெனிற்புயல்போதுகொள்ளாவிப்புனையிழையா... ...*
ரியலாமனைத்தையும்வேறென்னபேரிட்டியம்புவதே.....(௩௧)

(பயந்தோர்ப்பழிச்சல்)

அணியுஞ்சுடர்விரிசங்குபங்கேருகமாடகமு ... ... ... *
மணியுந்தரமன்னிவாழியரோதஞ்சைவாணன்வெற்பிற்... ...*
றணியுந்தொழிலொழித்தின்பமுந்துன்பமுந்தன்பதமே ... *
பணியும்பணியெனக்குப்பயந்தாளைப்பயந்தவரோ.......(௩௨)

(கண்படைபெறாதுகங்குனோதல்)

வாமக்கலையல்குல்வாணுதலார்தஞ்சைவாணன்வெற்பி ... ... *
லேமக்கல்விநலங்கவர்போதுநமக்களித்த ... ...*

காமக்கனலவர்கையகல்காலேக்கடும்பனிகூர் ... ... ... ...※
யாமக்கடலகத்துந்தனியாதினியென்செய்துமே... ... (௩௩)
பிரிவுழிக்கலங்கன் முற்றிற்று.

[இடந்தலைப்பாடு.]

(தந்ததெய்வந்தருமெனச்சேறல்)

மன்றும்பொதியினுமாமயில்சேர்தஞ்சைவாணன்வெற்பிற்... ※
றுன்றும்புயலிளஞ்சோலையின்வாய்ச்சுறவுக்குழையைச் ... ...※
சென்றுந்துசேல்விழியின்னேமுன்னாட்டந்ததெய்வநமக்... ...※
கின்றுந்தருநெஞ்சமேயெழுவாழியிங்கென்னுடனே... ...(௩௪)

(முந்துறக்காண்டல்)

மருவாயநாப்பண்மயிலுருவாய்நென்னல்வாணன்றஞ்சைத் ... ※
தருவாய்ததழைகொய்துதண்புனங்காத்துத்தடங்குடைந்து ...※
திருவாய்மலர்ந்துசிலம்பெதிர்கூயின்றேர்தெய்வதப்பெண் ...※
ணுருவாயொருதனியேநின்றதாலென்னுயிர்க்குயிரோ ... (௩௫)

(முயங்கல்)

மாறுகரன்றஞ்சைவாணன்வரோதயன்மாறையன்ன ... ... ...※
டாறுவிநின்றலர்தாமரையேயத்தடமலர்வா... ... ... ...※
யாறுதொழுகுசெந்தேனல்லிமேவுமரசவன்னம்... ... ... ※
யாறுகிடைப்பதுவேயென்னபான்மையிருவர்க்குமே......(௩௬)

(புகழ்தல்.)

அரும்பாமளவிற்றனத்தொடொவ்வாயலராமளவிற் ... ... ※
கரும்பாமொழிவதனத்தொடொவ்வாய்களியானைசெம்பொன் ※
றரும்பாரிவாணன்றமிழ்த்தஞ்சையான்றரியாரின்முன்செய்...※
பெரும்பாவமல்லதுநீர்நின்றபேறல்லிபெற்றிலையே ... ... (௩௭)

(ஆயத்துய்த்தல்.)

மேவிக்கலைக்கடலென்புலன்மீனுண்டுமீண்டுவந்தென் ... ...※
றைவிக்கமலத்தமரன்னமேநின்னயில்விழிபோல் ... ... ...※
வாவிக்கயலுகளுந்தஞ்சைவாணன்வரையினுடன் ... ... ...※
கூவிக்கயங்குடைநின்குயிலாயங்குறுகுகவே... ... ... ...(௩௮)
இடந்தலைப்பாடுமுற்றிற்று.

[பாங்கற்கூட்டம்.] (தலைவன்பாங்கனைச்சார்தல்)

புனையாழியங்கைப்புயல்வளர்பாற்கடற்பூங்கொடிவாழ்... ... ...※
மனையாகியதஞ்சைவாணனென்றொனமற்றிங்கனே ... ... ...※
யினையாதெழுமதிநன்னெஞ்சமேநமக்கின்னுயிரோ ... ... ...※
யனையானருட்புனலாலனக்கனலமாற்றுதற்கே ... ... ... (௩௯)

[பாங்கன்றலைவனையுற்றதுவினாதல்.]

வலம்புரிபோற்கொடைவணன்றென்மாறைமலைமழைவளர்பூஞ் *
சிலம்புறைசூர்வந்துதீண்டினபோலொளிதேம்பியிவ்வா ... *
றலம்புனைமேதாளுநின்னுள்ளமும்வாடியுருகிநின்று... ... ...*
புலம்புவதென்னைகொல்லோசொல்லவேண்டும்புரவலனே (௪௰)

(தலைவனுற்றதுரைத்தல்)

மலைமுழுதுங்கொற்றம்வைக்கின்றவாணன்றென்மாறைநண்பா
சிலைமுழுதுஞ்சுற்றமுற்றுமெய்யாணிற்பச்சென்னிறத்தே ...*
கொலைமுழுதுங்கற்றகூறியவாளிகுளிப்பவின்றென்...........*
கலைமுழுதும்பட்டதாலொருமான்முடிக்கண்ணியிலே ... (௪௧)

(கற்றறிபாங்கன்கழறல்)

தருகற்பகமன்னசந்திரவாணன்றடஞ்சிலம்பின் ...... ......*
முருகக்கடவுளையவெற்பாமுகிலும்பிறையுஞ்...... ......*
செருகக்கிளர்வளைவந்தவோர்பேதைக்குன்சிந்தையெல்லா *
முருகக்கலங்கினைநீதகுமோமற்றுனக்கிதுவே. - - (௪௨)

(கிழவோன்கழற்றெதிர்மறுத்தல்)

மாலாய்மதம்பொழிமாதங்கவாணன்றென்றென்மாறையன்னார் *
சேலார்கருங்கண்ணுஞ்செங்கனிவாயுஞ்சிறியநுண்மேனர் ... *
நூலார்மருங்குஞ்பெருந்தனபாரமுநும்மையன்றி... ... ...*
மேலானவருங்கண்டாலுளையாரிந்தவீரங்களே,........... (௪௩)

[கிழவோற்பழித்தல்.]

சூரார்சிலம்பிற்சிலம்பிமென்னூல்கொண்டுசுற்றவெற்றிப்.....*
போரார்களிறுபுலம்பிளைந்தாங்கொருபூவைகொங்கை........*
வாராலணைப்பவருந்தினைநீதஞ்சைவாணன்வெற்பா... ... ...*
வோராழிசூழுலகத்தேவமோநின்னையொப்பவரோ... ... ...(௪௪)

[கிழவோன்வேட்கைதாங்கற்கருமைசாற்றல்.]

பொறைகொண்டதாமரைப் போதன்னகொங்கையும் பொங்கரி
சேர்-கறைகொண்டவாளன்னகண்களுங்கண்டொருகன்னிதெ
வ்வைத்-திறைகொண்டவாணன்செழுந்தஞ்சைசூழுஞ்சிலம்பினி
ன்றென்-னிறைகொண்டவாறறியாதுகழாநிற்றிநீயின்னுமே...()

(பாங்கன்றன்மனத்தழுங்கல்.)

சீதளவாரங்கமழ்தஞ்சைவாணன்றென்மாறையன்னாள் ... ... *
காதளவாவெங்கடுவளவாவொளிர்காவியந்தண ...... ...... *
போதளவாவிழியென்னுமென்னாசைப்புறத்தளவா... ... ...*
சூதளவாமுலையென்னுமென்றுமினிச்செல்லுவதே ... ...(௪௬)

[தலைவனொடழுங்கல்.]

என்மேலறைவதியானிங்குநின்செவிக்கென்சொலெல்லாம்... ✻
வன்மேலடர்நொநாங்கைகரணமாத்தஞ்சைவாணன்வெற்பா...... ✻
கன்மேலறைகின்றமென்முளைபோலுங்கடல்வெதும்பிற்...... ✻
றன்மேல்விளாவவுண்டோதரைமேலொருதண்புனலே ...(சஎ)

(எவ்விடத்தெவ்வியற்றென்றல்)

முகத்திற்பகழியிரண்டுடையார்க்கிடமூரிமுந்நீ... ... ... ...✻
ரகத்திற்பிறந்தவரவிந்தமோவலடையார்தமக்கு... ... .........✻
மகத்திற்சனியன்னசந்திரவாணன்றென்மாறைவெற்போ.... ✻
நகத்திற்பகலனையாய்தன்மையேதுநுவலெனக்கே... ...(சஅ)

(அவனஃதிவ்விடத்திவ்வியற்றென்றல்)

கனமேகுழல்செங்கயலேவிழிமெழிகார்க்குயிலே... ... ...✻
தனமேமுலைகயென்றனிநெஞ்சமேயிடைதன்பகைக்கு... ...✻
வனமேயருளியவாணன்றென்மாறைமணிவரைசூழ்.......... ✻
புனமேயிடமிங்ஙனேயென்னைவாட்டியபூங்கொடிக்கே... (சகூ)

(பாங்கனிறைவனைத்தேற்றல்.)

மழைவளர்மாளிகைமறைவரோதயன்வாணன்வெற்பி .. ......✻
னிழைவளர்வார்முலையேரிளந்தோகையையிக்கணம்போய்க் ✻
கழைவளர்சாரலிற்கண்டுனையான்வந்துகாண்பளவுந்... ... ...✻
தழைவளர்தாரண்ணலேதணிவாய்நின்றகவின்மையே........()

(குறிவழிச்சேறல்,)

பாரித்ததிண்மையெம்மண்ணனுண்ணீரொப்பருகினின்று ... ✻
பூரித்தசெவ்விளநீர்களுந்தாங்கியப்பூங்கொடிதான்............✻
வாரிதலம்புகழ்வாணன்றென்மாறைவரைப்புனஞ்சூழ் ... ... ✻
வேரித்தடம்பொழில்வாய்விளையாடுங்கொன்மேயின்றே. (ருக)

(இறைவியைக்காண்டல்,)

கானேயளகங்கரும்புயலேயியல்கார்மயிலே,... ... ... ... ...✻
மானேவிழிமுகமாமதியே தஞ்சைவாணன்வெற்பிற்... ... ...✻
றேனேய்தொடையலச்சேயனையான்சொன்னசேயிழையா...✻
பானேயிவளிதுமேவியிடமாகியதண்புனமே... ... ... (ருஉ)

(இகழ்ந்ததற்கிரங்கல்,)

கொலைகாலயிற்படைநேரியர்கோனகங்கோடவங்கைச்.......✻
சிலைகால்வளைத்துத்திருத்தியவாணன்றென்மாறைவெற்பின்...✻
முலைகால்கொளக்கண்டிளைத்தநுண்ணூலிடைமுற்றிழைகண்✻
வலைகால்பிணிப்பவுந்தார்வருந்தாரலர்மாலழிந்தே......(ருங)

(தலைவனை வியத்தல்.)

தலங்காவலன்றஞ்சைவாணன்முந்நீர்பொருந்தண்பொருந்தத் ※
திலங்கார்வலவடக்கொங்கைவெற்பாவிணைநீலவுண்கட்...... ※
பொலங்காமவல்லிகடைந்தவப்போதுபுடைபெயர்ந்து... ...※
கலங்காதிருந்ததெவ்வாறெம்பிரான்றன்கலைக்கடலே... ... (௫௪)

(தலைவியை வியத்தல்)

வெங்கோன்மழைபொழிவானவர்போர்வென்றமீனவர்தந்... ※
செங்கோன்முறைமைசெலுத்தியவாணன்றென்மாறைவெற்பி ※
னங்கோன்மெலியநலிகின்றகாமவெந்நஞ்சினையிப்... ... ... ※
பைங்கோன்மணிவளையார்தணியாரல்லர்பார்வைகொண்டே...()

(தலைவன்றனக்குத்தலைவியினிலைகூறல்)

வளங்கனிமாறைவரோதயன்வாணன்மலயவெற்பா...... ......※
உளங்கனிகாதலுடனின்றதானின்னுடலமெல்லாங்... ... ......※
களங்கனிபோலக்கருகிவெண்கோட்டுக்களிறண்டதோர்... ...※
விளங்கனிபோல்வதிதானிறைவாங்கியமென்கொடியே ... (௫௬)

(தலைவன்சேறல்)

புறங்கூரிருட்கங்குல்போன்றகதன்பகல்போன்றபொங்கர் ...※
நிறங்கூர்படைக்கண்ணிநின்றனளே நிழலைச்சுளித்து......※
மறங்கூர்களிற்றண்ணல்வாணன்றென்மாறையில்வாணுதலா...※
ளறங்கூர்மனத்தருளானின்றதாமெனதாருயிரே........ ......()

(தலைவியைக்காண்டல்)

பாகையுந்தேனையும்போன் மொழியார்தமிழ்ப்பைந்தொடையு
ம்வாகையுஞ்சூடியவாணன்றென்மாறைவளாமுமைவ..........※
னீகையும்போலுமெழிலியைநோக்கியிரங்குபுள்ளுந்... ...※
தோகையும்போனின்றவாதனியேயிந்தசோலையிலே...... ...()

(கலவியின்மகிழ்தல்)

யாரும்பார்தம்பதமென்போலவெய்தினரிம்பரம்பொன்... ...※
வாருந்துறைவையைசூழ்தஞ்சைவாணன்மலயவெற்பிற்... ...※
றேருந்தொழுமினிதாந்தமிழ்போன்றிவள்செங்கனிவா ... ...※
யாருந்தொழுமினிதாயமிழ்தாமெனதாருயிர்க்கே ... ... ..()

(புகழ்தல்)

தழல்கண்டதன்னகலிவெம்மையாறத்தன்றண்ணளியா ... ...※
னிழல்கண்டசந்திரவாணன்றென்மாறைநிழல்பொலியுஞ் ...※
சழல்கண்டதன்னகதிர்முத்தமாலிகைக்காரிகைநின்............※
குழல்கண்டபின்னல்லவோவறனீருட்குளித்ததுவே...... ...()

(பாங்கியொடுவருகெனப்பகர்தல்.)

என்காதலியென்றியம்புகின்றேனிக்கிளிவருங்கா... ......... *
ளின்காதலியொடுநீவரல்வேண்டுநிலமடந்தை... ... ... ... *
தன்காதலன்றஞ்சைவாணன்றென்மாறைத்தண்டாமறைவாழ் *
பொன்காதல்கொண்டுதொழுஞ்சிலம்பாரடிப்பூங்குயிலே (௬௧)

(பாங்கிற்கூட்டல்

என்னூடுநின்றவிளங்கொடியேசங்கமேய்ந்துகுழாந்... ... *
தன்னூடுசெல்லுஞ்சலஞ்சலம்போற்றஞ்சைவாணன்வெற்பிற் *
பொன்னூடுசெல்லும்புகழ்மணிபோனின்புடையகலா... ... *
மின்னூடுநுண்ணிடையாருடனீசென்றுமேவுகவே...... (௬௨)

(பாங்கற்கூட்டமுற்றிறு-)

(பாங்கிமதியுடன்பாடு)--(தோற்றத்தாலாராய்தல்)

வண்டலையாயத்துடனயந்தோவன்றி வண்டிமிர்பூந்... ......*
தண்டலையாரத்தழைகள்கொய்தோதஞ்சைவாணன்வெற்பிற் *
புண்டலைவேலினுங்கண்சிவப்பாரப்பொலஞ்சுனைத்தேன்.....*
கொண்டலைநீர்குடைந்தோவியண்மேனிகுழைந்ததுவே......()

(ஒழுக்கத்தாலையந்தீர்தல்) [டை

திளைக்குந்திரைவேலுனக்கு முன்றோன்றலிற்செம்பொன்வெற்
வளைக்கும்பிரான்முடிவைகுதலாற்றஞ்சைவாணன்மண்மேல் *
விளக்கும்புகழ்போலவிளங்குதலாற்செக்காவிண்பிறைகார் ...*
தலைக்குங்குழற்றிருவேதொழும்வதருந்தன்மையதே.....(௬௪)

(சுனைநயப்புரைத்தல்.)

பூட்டியவார்சிலைவீரனாவென்றெப்பொருப்பினுஞ்சீர் ... ...*
தீட்டியவாணன்றென்மாறையன்னீரிதமிழ்ச்செம்மையுமை *
யூட்டியவாளின்கருமையந்தான்கொண்டுமக்கிங்ஙனே........*
கூட்டியவாறுநன்றுன்முல்லைமாலைசுனைப்புனலே ...... ......()

(சுனைவியந்துரைத்தல்)

மறலாவெதிர்ந்தமறுமன்னர்வேழமலைவெறிவேற்...........*
திறலார்முருகன்செழுந்தஞ்சை வாணன்றென்மாறைமையை *
யறலார்குழலாய்நுதற்குறுவேர்வுமழகுநின்போற் ............*
பெறலாமெனிற்குடைவேனடியேனும் பெருஞ்சுனையே ... ()

(தகையணங் குறுத்தல்)

குவளைசிவத்துக்குமுதம் தெளுத்தகுறையல்லவே..... ......*
வவ்வளமறைத்துன்னைக்காட்டலுமாமலர்ந்தேன்குதிக்கத்......*
தவ்வளகுதிக்குந்தடம்பொய்கைசூழ்தஞ்சைவாணன்வெற்பி ...*
லிவ்வளவாக்கண்டிநீயுணங்கேயின்னெழுந்தருளே........ (௬௭)

[நடுக்கநாட்டம்]

பால்போன்மொழிவஞ்சியஞ்சினின்றேனிந்தப்பார்முழுது *
மால்போற்புரந்தவன்மாறைவரோதயன்வாணன்வென்றி ... *
வேல்போற்சிவந்துநெரிமுறைநகோடியவேந்தன்வெய்ய ....*
கோல்போற்கொடியனவாக்கொலையானையின்கோடுகண்டே ()

(பெட்டவாயில்பொற்றிரவ்வலியுறுத்தல்)

பெருமணிவெண்டிரைப்பைங்கடல்வங்கம்பொருந்தி முன்பு*
தருமணியின்பெற்றணியவர்போற்சென்றுசார்ந்திரந்து......*
பருமணிநன்கலப்பாங்கிலையநீக்கியைப் பாவையைநா ....... *
மருமணிவண்டுறைதார்வாணன்மாமன்றமருவுதுமே ... (௬௯)

(ஊர்வினாதல்,)

புதியேன்புகவிப்புனத்திற்கியான்றனிப்போந்தனனும்,......*
பதியேதுசெல்லும்படிசொல்லுயிர்படிமேற்படிந்த, ... *
மதியேய்க்குலைதமதில்சூழ்தஞ்சைவாணன்றென்மாறைவையை,*
நதியேய்ச்சுழிக்கரும்பழிந்திருந்திநல்லவரோ.... ... ... (௭௰)

(பெயர்வினாதல்)

கறைத்தாவியுந்திரியகாவிரிவைகியசாலத்தினும்... ... ... *
தனைத்தாருவன்னசெந்தண்ணளிவாணன்றமிழ்த்தஞ்சைசூழ்*
வனைத்தாழ்சிலம்பினும்வழ்தென்றிவஞ்சியன்னீ... ... *
நினைத்தாவிழிவதுண்டேற்பெயரோனுமுனாமின்களே,... (௭௧)

(காடுதிவினாதல்)

தண்டட்டிமேவும்வயற்றஞ்சைவாணன்றமிழ்ச்சிலம்பிற்... ...*
பண்பட்டதன்மைமொழிப்பாவையன்னீர்பணைபட்டகையு... *
மண்பட்டகோடு மதம்பட்டவாயும் வடிக்கணைதோய் ... *
புண்பட்டமேனியுமாய்வந்ததோவெருபோர்க்களிறே. ...(௭௨)

(ஒழிந்ததுவினாதல்-)

வனமார்குழ்லைப்பலகக்குறலாமெனவாணன்றஞ்சைப்... *
புனமார்குளிரிபபுடைப்பொலியாற்கிள்ளைம்பாயினமீண் ...*
டினமாமெனவந்திவ்வனமெல்லாம்வவ்வுமென்யதற்கோ... *
கனமாறுங்குழலீர்மொழிய தொழிகாரணமே... ... (௭௩)

(யாரோயிவர்மனத்தெண்ணம்யாதெனத்தேர்தல்)

தளையாரவண்புகழ்தேக்கியவாணன்றமிழ்த்தஞ்சைசூழ் ... *
வளையாதுநாம்பதியாதுநாம்பேரொன்பார்வார்துளக்கார் ... *
புளையானயம்பொடுபோந்ததுண்டோவென்பர்பூங்கொடியி. *
னுளையாததென்னென்பராலென்கொலோ விவர்ட்கொண்டதே

(எண்ணந்தெளிதல்.)

யாரோயிவரொன் றறிகின் றிலேமெதிர்ந் தானையென்று ... ...*
வாரோய்கழற்புனைவாணன்றென்மாறைவரையுலாவீ ... ...*
ந்தோதெனமுன் வினவிப்பின் வேறொன் றுரைப்பதெல்லா... *
தேரோயிவர்பொருட்டாலென் றுதோன்று மென்னெஞ்சினுக்
[கே

(தலைவன்கையுறையேந்திவருதல்)

தண்டாமரைமலர்ப்பொன்னையும்பார்மங்கைதன்னையும்போல்*
வண்டார்குழன்மடவார்மணந்தார்சென் றுவாணன்றஞ்சை... *
நுண்டாதணிபொங்கர்நீழலின்கீழ்நுடங்கிடையார்க் ... ...*
கண்டாதரவையெல்லாஞ்சொல்லவேநல்லகாலமிதே ... (௭௬)

(தலைவனவ்வகைவினாதல்)

வல்லாரிளங்கொங்கைவஞ்சியன்னீர் தஞ்சைவாணனைக்கண் ...*
டொல்லார்களத்திலுடைந்ததுபோலவொருகலையோர்... ... *
வில்லார்கணைதைப்பமெய்சோர்ந்தினம்விட்டுவெய்துயிர்த்துப்,
புல்லார்வதுமின்றியேவந்ததோநும்புனத்தயலே...... ...(௭௭)

(எதிர்மொழிகொடுத்தல்)

வாக்குந்திறனுமதனையொப்பீர்தஞ்சைவாணன்மஞ்சு ... ...*
தேக்குங்குடுமிச்சிறுமலைச்சேதிரிகோட்டிரலை... ... ... *
கோக்குஞ்சரமுங்குருதியுஞ்சோரக்கொடிச்சியரேங் ... ...*
காக்கும்புனமருங்கேதனியேவரக்கண்டிலமே ... ...(௭௮)

(இறைவனைநகுதல்.)

மைவாளிலங்குகண்மங்கைநல்லாய்தஞ்சைவாணன்வெற்பில் ... *
விவ்வாளிமொய்ம்பரின்றெய்தமெய்ம்மானிளமாந்தளிரின் ...*
செவ்வாளியுங்கொண்டுசேட்சென்றதாலன்றுசிலைதொண்கன்*
கைவாளியுங்கொண்டுபோனபொய்ம்மானினுங்கள்ளத்ததே...()

(பாங்கிமதியினவரவர்மனக்கருத்துணர்தல்)

புனங்காவலன்றிவள்பூண்டதுவாண்டலைபோந்ததுமா ... ...*
னினங்காவலின்கலையெய்யவன்றுவிகலாழிவிந்தை ... ... *
தனங்காவலன்றஞ்சைவாணனன்னாட்டிவர்தங்களிற்று ... ...*
மனங்காவல்கொண்டதெல்லாங்கண்களேசொல்லுவாய்திறந்தே(

பாங்கிமதியுடன்பாடு-முற்றிற்று.

(தலைவனுட்கோள்சாற்றல்)

வாவுங்கலைவிந்தைக்காவலன்வாணன்றென்மாறையன்னீ ... ...*
ரோவுந்தொழிலெனச்சோதிபலாதநிக்கேநமக்கோர் ... ... *
மேவுஞ்செய்குன்றமுஞ் சோலையுமாகப்பொன் வெற்பும்விண்
ணோர்,காவுந்தரவும்வல்லேனெனையாளுங்கடைக்கண்வைத்தே,()

(பாங்கிகுலமுறைகிளத்தல்)

நீவேறுறைக்கின்றதென்குறமாதெங்கணேரிழைபோர் ... *
மாவேழுவன்படைவாணன்றென்மாறைமன்னியையன்றித் ... *
தாவேதுமில்வாத்தமனியமீதுதலம்புரக்குங் ... ... ... *
கோவேயழுத்துவரோவறியோருங்குருவிந்தமே... ... (௮௨)

(தலைவன்றலைவிதன்னையுயர்த்தல்)

மிக்காருரல்லர்மெல்லியன்மாதரின்மேதினிமேற் ... ... *
றக்காற்புகழ்தஞ்சைவாணன்பிரான்றமிழ்நாடனையாய் ... ...*
மெத்கார்திகர்குழல்லள்ளிசெவ்வேளுக்குவல்லவையா ... *
மிக்காரணமுணராதென்சொலோநின்றியம்புவதே ... (௮௩)

(பாங்கியறியாள்போன்றுவினாதல்)

பொன்னியலூசலும்பொய்தலுமாடியெப்போதுநன்னீர் ...*
மன்னியனீலமுநித்திலமுங்குற்றுவாணன்றஞ்சை... ... ...*
யின்னியலாருமிளமரக்காவினிடம்பிரியாக்... ... ... ... *
கன்னியர்தாம்பலர்யார்நின்னைவாட்டியகாரிகையே... ...(௮௪)

(இறையோனிறைவிதன்மையியம்பல்)

தாளிணைமாந்தளிரல்குல்பொற்றேரிடைசங்கைகொங்கை ......*
கோளிணைகோலக்குரும்பைபைகைகாந்தள்கொடிக்கரும்பார் ... *
தோளிணைவேய்முகந்திங்கள்செவ்வாயிதழ்தொண்டையுண்கண்,
வாளிணைவார்குழலாய்வாணன்மாறையெம்மன்னுயிர்க்கே,(௮௫)

(பாங்கிதலைவியருமைசாற்றல்)

புகழார்வரையெம்பரவலன்காதற்புதல்வியைநீ... ... ... *
ரிகழாவெளியளென்றெண்ணப்பெறீரெமக்கென்றும்வண்மை*
திகழாபரணன்செழுந்தஞ்சைவாணன்சிலம்பினுள்ளீ ... ...*
ரகழார்கலியுலகிற்புலனுணவணங்கவளே ... .... ... (௮௬)

(தலைவனின்றியமையாமையியம்பல்)

வனைந்தாலனகொங்கைமாதுருவாய்த்தஞ்சைவாணன் வெற்பிற்*
புனைந்தாலனையபுனத்தபல்வாய்வண்டுபோதகத்தே... ... *
னனைந்தாலனையவென்னல்வினைதான்வந்துநண்ணிற்றென்று *
நினைந்தாலணங்கனையாய்தமியேனுயிர்நிற்கின்றதே ... ...(௮௭)

(பாங்கியிற் குறைநீயே செய்தாகென்றல்.)

மருப்பாவியதொங்கல்வாணன்றென்மாறைவனசமலர்த்... ...*
திருப்பாவையன்னவென்சேயிழையாட்குன்றிருவுளத்து ...*
விருப்பாகியகுறையுள்ளதெல்லாஞ்சொல்லிவேண்டுகநீ ... *
பொருப்பாமொழிப்பெறுவோம்மனேரிலைபோல்வனவே ()

(பாங்கியைத்தலைவன்பழித்தல்)

வில்லார்நுதல்வெய்யவேலார்விழிக்கென்மெலிவுசொல்ல ......*
வல்லாரிலைசொல்லவல்லையென்றியான்றஞ்சைவாணன்றெவ்வி*
னெல்லாந்துடைசென்றணைவோனின்றணங்கியிந்தா.......*
சொல்லாமிரந்ததுநின்குறையோயல்லவென்குறையே... (அக)

(பாங்கிபேதைமையூட்டல்)

தேனுஞ்சுரும்புஞ்செறிதொங்கல்வாணன்றென்மாறைவெற்பா,
மானுங்கலையும்வடிக்கணைபாலெய்துமன்னுயிரு... ... ...*
ஊனுங்கவர்கின்றதன்னையர்போலயிலொத்தகண்ணு ... *
டானும்பிறருள்ளதோயறியாததகைமையளே ... ... (கய)

(காதலன்றலைவிழுத்திவுடைமைமொழிதல்.)

வருநீர்வளமுலைமங்கைநல்லாய்செங்கைவாணன்வையைப... ...*
தருநீர்மலிவயற்றஞ்சையன்னாளன்றுதஞ்சமிலே ... ... *
னருநீர்நலவயுறக்கண்மலர்நீர்வெளிந்தூற்றினளா... ... *
விருநீர்நிலத்தொள்ளுமோவறியாளன்றுடம்பிவ்வுவையே ... (கக)

(பாங்கிமுன்னுறுபுணர்ச்சிமுறைமையுறக்கூறல்)

செறிவளர்காவிவயற்றஞ்சைவாணன்சிறுமலைமே... ... ...*
னெறிவளர்வார்குழலேயிழையாளன்னநீர்மையளேற் ... *
குறிவளர்யாவின்முன்கூடியவாறின்றுகூறுகநீ... ... ... *
கறிவளர்சாரல்வெற்பாபிறருமென்னகாரியமே ... ...(கஉ)

(தன்னிலைதலைவன்சாற்றல்)

உடைத்தென்புறவந்தப்பைந்தொடியாசமுறுவிடில்வெண் ...*
டிடைத்தென்கடன்முத்தநந்தென்மலைச்சந்துஞ்செழும்பனிநீ*
ரடைத்தென்புருகமெய்யப்பினும்வெப்பமறுதினிநின்.........*
வடைத்தென்முருமெல்லாந்தஞ்சைவாணன்வளையணங்கே(கரு)

(பாங்கியுலகியலுரைத்தல்)

விளையகநாண்மலர்மேல்வியன்மாதவிரும்பினையேல் ... ...*
வளையகநாட்வளர்ந்துகொண்டிதஞ்சைவாணன்முந்நீர்... ......*
தளையகநாண்மறைக்கேள்வியர்வேள்வியர்சான்றவர்தம்... ...*
முளையாநாடிமுன்னிட்டனதாகுமுலகியலே... ......(கச)

(தலைமகன்மறுத்தல்) 12489

வெண்டாமரைமங்கைகாதலனாகியவேதியன்பா... ... ... *
லுண்டாகியதொல்லுலகியலாலுங்களாரணங்கை ... ... *
வண்டார்குழலிவரைந்துகொள்வேன்றஞ்சைவாணன்வண்மை *
கண்டாலருளுள்ளநீயெனதாருயிர்காத்தபின்னே........(௧௫)

(பாங்கயஞ்சியச்சுறுத்தல்)

மல்லார்புயன்றஞ்சைவாணன்வெற்பாவெமர்வந்தினியிக்......*
கல்லார்வியன்புனங்காவல்விடாரவர்காணின்மிகப் ... ... *
பொல்லாதிருண்டதுபோதும்மற்றியாங்களும்போதுமிங்கு *
நில்லாதெழுந்தருணீயுமிப்போதுநெடுந்தகையே... ...(௧௬)

(தலைவன்கையுறைபுகழ்தல்)

சிமையார்மலயத்தமிழ்த்தஞ்சைவாணன்சிறுமலைமே... ... *
லமையாகியதடந்தோளன்னமேயணியத்தருமா... ... ...*
லுமையாளிறைவன்பயில்கயிலாயத்துழும்பர்தங்கு ... ... *
மிமையாசலத்துமெல்லாமில்லையாணிகரித்தழைக்கே......(௧௭)

(பாங்கிகையுறைமறுத்தல்)

மல்குற்றதண்புனல்சூழ்தஞ்சைவாணன்மலயவெற்பா... ...*
நல்குற்றவையிந்தநாட்டுளவன்மையினன்னுதலா... ... ...*
ளல்குற்றடத்தெமர்கண்டாலயிர்ப்பரதுவுமன்றிப் ... ... *
பல்குற்றமும்வருமால்யாங்கள்வாங்கெம்பசுந்தழையே... (௧௮)

(ஆற்றுநெஞ்சினோடவன்புலத்தல்)

உழையும்வெங்காளமும்போலுங்கண்ணுளொருகாலமுள்ளங் *
குழையுமெம்பாலென்று கொண்டநெஞ்சேசலிக்கோடமண்
மேன் மழையுமந்தாரமும்வந்தன வாணன்றென்மாறையின்மா
ந் தழையுநம்போலிங்ஙனேகவின்வாடத்தவஞ்செய்ததே (௧௯)

(பாங்கியாற்றுவித்தகற்றல்)

சோலையில்வாழிளந்தோகையன்னாளைத்தொழுதிரந்திம் ... ...*
மாலையில்வாழிவரக்கொள்வுல்யான்றஞ்சைவாணன்வெற்பா ...*
வேலையில்வார்துகிரன்னவெய் யோன்வெயில்வெற்பின்மல்குங்
காலையில்வாபின்னையென்கையதாகுநின்கையுறையே.........()

இரந்துகுறைபெறாது வருந்தியகிழவோன்மடலே
பொருளெனமதித்தல்

திருந்தார்தொழுங்கழற்சேயன்ன வாணன்றென்மாறைவெற்பி *
னருந்தாவமுதன்னவஞ்சொனல்லாரழகார்குழைதோய்... ...*
பெரிந்தாரைவேல்விழிதந்தவெங்காமப்பிணிதனக்கு...... ...*
மருந்தாவதுநெஞ்சமேயில்லைவேறுமடலன்றியே ... ... ()

(பாங்கிக்குலத்தின்மேல் வைத்துரைத்தல்)

விளையூர்குழலியர் தந்தசிந்தாகுலவெள்ள நிலாக்... .... ... ...*
களையூர்பொழுதிளங்காளையர்தாங்கிழிப்பிடித்து ... ... ... *
தளையூர்தொறும்பெண்ணைமாமடலூர்வர்தவிர்ந்துபின்னும் *
வளையூர்வர்தஞ்சையர்கோன்வாணன்மாறையில்வாறுதலே...()

(அதனைத்தன்மேல்வைத்துச்சாற்றல்)

வன்பணிபோனிலந்தாங்கியவாணன்றென்மாறைவெற்பின் ...*
மின்பணிபூண்முலைமெல்லியலீர்குறைவேண்டியுங்கண்......*
முன்பணிவேனின்றுநாளைவெண்பூளைமுகிழெருக்கோ ... ...*
டென்பணிவேன்மடன்மேல்வரும்வணிவையென்பணியே ...()

(பாங்கிதலைமகளவயவத்தருமைசாற்றல்)

தொடையேயெருக்கென்புநீயணிந்தாலென்னைகுல்வளையூர் ...*
மடையேய்வயற்றஞ்சைவாணன்வெற்பாமலரோன்வகுத்த ...*
படையேநயனம்படைத்தபொற்பாவைபடியெழுக்க... ......*
விடையேயதனைத்தெரியாதுலாயாணியிடவரிதே... ... .....()

(தலைமகன்றன்னைத்தானேபுகழ்தல்)

நறையலராவினைப்போதிசெயாதிசைநான்முகத்து...... ......*
மறையலராவந்தமன்மகன்யான்றஞ்சைவாணன்வையைத் ...*
துறையலராவியங்காவியங்கண்ணிதுணிந்துசொல்லும்........*
குறையலரார்குழலாட்கினித்தீரக்குறையில்லையே...... ... ...()

(பாங்கியருளியல்கிளத்தல்)

செயலார்தடம்பையிற்செந்தலையன்றிற்சினைப்புளைபைங........*
கயலார்வன்வெண்குருகின்வல்பார்ப்புளகைக்கடங்கா... ......*
மயலார்களிற்றண்ணல்வாணன்றென் மாறைவையந்துறைவா*
வியலாதருளுடையார்க்கென்றுமாமடலேறுவதே ... ... ... ()

(கொண்டுநிலைகூறல்)

வெண்டோடணிமுகப் பைங்குரும்பைக்கொங்கைவெய்யவுண்க
கண்டோர்விரும் புங்கரும்பனையாளைக்கடற்றுறைவா ... ... [ட்
கொண்டோர்குறைமுடிகொம்பனையார்நின்குலமறத்தால் *
வண்டோலிடுந்தொங்கலான்வாணன்மாறைவளநகர்க்கே.....()

(தலைவியிளமைத்தன்மைபாங்கிதலைவற்குணர்த்தல்)

ளவரும்பாகநீலங்கள்காமக்கடவுளுமால் ... ... ... ...*
கொள்வரும்பாலைபங்குரும்பைக்குலஞ்செங்குமுதத்துவெண் *
டள்வரும்பாநணைபனைதஞ்சைவாணன்றமிழ்மையநாட் ... *
டிளவரும்பாமிவண்மாட்டென்கொலோநின்றிரப்பதுவே (௧அ)

# பாங்கிற்கூட்டம்

(தலைவன்றலைவிருத்திவண்ணமுரை தகவு)

இலைபயில்வானுதன்மின்னேபிறந்தவச்செவ்வியிலே ... ... *
கொலைபயிலுகைக்குருளையெப்போற்குறியோனிருந்த ... ... *
மலைபயில்வார்தமிழ்வாணன்றென்மாறைமயிலனையா ... *
வலைபயிலால்விழியாலெனதாவியணங்கினளே ... ... ... ()

(பாங்கிசெவ்வியருமைசெப்பல்)

ஏடாரலங்கலிலங்கிலைவேல்வெற்பவேழுலகும் ... ... ... *
வாடமல்வந்தருளீவாணன்றென்மாறையில்வல்லியன்னாள் ... *
சூடாள்குவளையுமுல்லையுஞ்சூட்டுஞ்சுனையும்பந்து ... ... *
மாடாடனக்கென்கொலோவடியேன்சென்றறிவிப்பதே ... ()

(தலைவன்செவ்வியெளிமைசெப்பல்)

தேன்வந்தவாயிதழ்ச்சேயிழையாயிளஞ்செவ்விநவ்வி ... ... *
மான்வந்தவாள்விழியுஞ்சிக்குநீதஞ்சைவாணன்வெற்பில் ... *
யான்வந்தவாசென்றியம்புதியேல்வரியாவதொன்று ... ... *
டான்வந்தவாவுடனேநின்னையாரத்தழீஇக்கொள்ளுமே ... ()

(பாங்கியென்னைமறைத்தபினெளிதென்றநகுதல்)

மண்ணும்பயில்வித்துமொன்றினுஞ்சந்திரவாணன்வெற்பா *
நண்ணும்புனலின்றியங்குரியாதுங்கனல்வினையாற் ... ... *
கனனுங்கருத்துங்கலந்தனவாயினுங்கண்ணனினுமு ... *
ளெண்ணுங்குறையென்னைநீர்மறைத்தாலிங்கிபல்வதன்றே ... ()

-அந்நகைபொறாஅதவன்புலம்பல்)

வெவ்வேலெறிந்தவிழுப்புண்ணின்மீட்டும்வெதும்பியதோர் *
செவ்வேலுழைப்பலர்சிலமன்றோதிருவேமநகார் ... ... *
வைவேலமர்வென்றவாணன்றென்மாறைமயில்பொருட்டா ... *
னவேனையஞ்சலென்றுதின்னவாறுநகைக்கின்றதே ... ... *

(பாங்கிதலைவனைத்தேற்றல்)

தின்கண்ணனையதன்பாங்கியருள்ளுந்தனக்குயிரார் ... ... *
மென்கண்ணருள்பெரிதெம்பெருமாட்டிக்கிகன்மலைந்தார் ... *
வன்கண்ணமர்வென்றவாணன்றென்மாறையில்வந்தவளாற் ... *
புன்கண்ணடையலைநீயினிவாடல்புரவலனே, ... ... ... ()

(பாங்கையுறையேற்றல்.)

ஒலிதெண்கடல்புடைசூழுலகேழினுஞ்சூழ்வினைதான் ... ... *
வலிதென்பதனைவயக்கியதாற்றஞ்சைவாணன்வெற்பா, ... ... *
கலிதெங்குமாவுங்கமுகும்பாலவுங்கதலிகளும் ... ... *
பொலிதென்பொதியிலின்மேற்சந்தனமுடவிப்பூந்தழையே ... ()

## பாங்கியிற் கூட்டம்.

(கிழவோனாற்றல்.)

மைப்போதணிதொங்கல்வாணனென்றோனவல்வினையேற் *
கப்போதடைந்தவருந்துயர்நீங்கியரும்பியபொற் ... ... *
செப்போதிளமுலையாணகைவாண்முகத்திங்களைக்கண்... ...*
டிப்போதிளகியதாலிந்துகாந்தங்கொலென்னெஞ்சமே ... (

இறைவன்றனக்குறைநேர்பாங்கியிறை
விக்கவன்குறையுணர்த்தல்.

இருவர்கண்டால்வருமேதமென்றெண்ணியேனக்கெதிரோ *
வருவர்வந்தாலுந்தம்வாய்திறவார்தஞ்சைவாணன்வெற்பி ... *
லொருவர்நஞ்சாரலுழையகலார்தழையுள்ளதெல்லாந் ... *
தருவர்வம்பார்முலையாயென்கொலோசெயத்தக்கதுவே ... ()
(இறைவியறியாள்போன்றுகுறியாள்கூறல்)
கலைதொடக்கீண்டகருவியந்தேன்பலகால்கொடுமா ... ... *
மலைதொடுத்தூர்ந்துவருகின்றதாற்றஞ்சைவாணன்வென்றிச் *
சிலைதொடுத்தாங்கெழில்சேர்நுதலாய்பயில்செம்பழுக்காய்க் *
குலைதொடுத்தோங்குபைங்கேழ்ப்பூகநாகக்குழாங்கவர்ந்தே...()
(பாங்கியிறையோற்கண்டமைபகர்தல்)
திவாகரனேயன்னபேரொளிவாணன்றென்மாறைநன்னாட்... *
டுவாமதிபோலுமொளிர்முகத்தாயென்னொளிப்பதுன்மே... *
லவாவினனாகியோர்மானைவினவிவந்தானையின்றிக் ... ...*
கவானுயர்சோலையிவாய்வண்டலாருழைக்கண்டனமே ... ()
(பாங்கியைத்தலைவிமறைத்தல்)
செவ்வண்ணவேல்விழியாய்தஞ்சைவாணன்றென் மாறைநன்னா
ட்டிவ்வண்ணநீசொல்வதேற்பதன்றுனின்னிடையெனத்தா...*
மெய்வண்ணம்வாடிவெறிதேவருந்திவிருந்தினராய்க் ... *
கைவண்ணவார்தழைகொண்டு சென்றார்தமைக்கண்டுகண்டேமே ()
(பாங்கியென்னைமறைப்பவதன்னெனத்தழால்)
பரக்கின்றசெவ்விதழ்ப்பங்கயப்பாதம்பணிந்துநின்னை... ...*
யிரக்கின்றதொன்றையுமெண்ணலையாலெழுபார்முழூம் ... [நீ
புரக்கின்றகோன்றஞ்சைவாணன்பொதியிற்பொய்த்தென்னை
கரக்கின்றதென்னைகொலென்னுயிராகியகாரிகையே ... ... *
(பாங்கிகையுறைபுகழ்தல்,
சூடத்தகுவனவல்லவெல்லாம்படிசொல்லினுந்தாம்... ...*
வடத்தகுவனவல்லநல்லாய்தஞ்சைவாணன்வெற்பர் ... *
தேடத்தகுவனவல்லதல்லாதசிலம்பினுள்ளார் ... *
நாடத்தகுவனவல்லகல்லாரநறுந்தழையே ... .....()

(தோழி[illegible])

வளையுங்குழல்வஞ்சிவாணன்றென்மாறைவரைக்களிறு ... ...*
திளையுந்தழையும்பிடியொடுமேய்ந்துதெளிந்தவின்னீர் ......*
சுளையுண்டசோகநிழற்சோகநீங்கித்துயில்வதுகண் ... ... ...*
டெளையுங்கடைக்கணியாவிலையாநிற்பதோதிலமோ... ...(௱௨௰௫)

(மறுத்தற்கருமைமாட்டல்)

கையுந்தழையமுன்காண்டொறுங்காண்டொறுங்கட்டுரைத்த *
பொய்யுந்தொலைந்தனபூந்தழைபோலசிபோர்த்துநஞ்சு......*
மையுங்கலந்துண்டவாள்விழியாய்தஞ்சைவாணன்வெற்பர் ... *
மெய்யுந்துவண்டதென்றென்முடியாதுவெளிநிற்கவே ... ...()

(தலைவன்குறிப்புவேறாகநெறிப்படக்கூறல்)

விடையான்மிசைவருமேருவில்லானெடுமேழிவென்றிப் [மை
படையானெடும் வெம் பகைகொள்வதோபகல் போலுமெய்ம்
முடையானுயர்தஞ்சைவாணனென்றொனவொல்கியநுண் ...*
ணிடையாய்பிறிதுகொலோவுறியேன்வெற்பனெண்ணுவதே ()

(தொழிதலைவியைமுனிதல்)

தூற்றுதலாமறைப்பவர்க்கேகுறைசொல்லுகுற்ற............*
மேற்றுதொழியெனையெம்பெருமாட்டிசென்றேற்றவற்கு ...*
மாற்றுதருள்செங்கைவாணன்றென்மாறையில்வந்துநெஞ்சம் *
போற்றுதுநின்றயலேன்சொன்னதீங்குபொருத்தருளே ... ()

(தலைவிபாங்கியைமுனிதல்)

மற்றேதவர்நினைவார்தஞ்சைவாணன்வரையின்முந்நாட் ......*
பொற்றேரின்வந்துபுணர்ந்துசென்றார் தம்பொருட்டுநம்மைக்
குற்றேவன்மங்கைகுறையிரந்தாளெனுங்குற்றமிந்நா........*
ளொற்றேதவறுநம்பாலில்லையாகவுமெய்தியதே... ... ...(௱௨௭

(தலைவிகையுறையேற்றல்)

ஆற்றுந்தலைவரருந்துயராற்றினுமாற்றலெண் ... ... ... ...*
மாற்றும்புனையின்மயிலனையாய்தஞ்சைவாணன்றெவ்விர்......*
போற்றுங்கொடுவினையேன்புனையாவிடிற்போந்ததோ ... ...*
தூற்றுந்தழையென்றிதோன்றெங்கனேவந்துதோன்றியதே-()

(இறைவிகையுறையேற்றமைபாங்கியிறைவற்குணர்த்தல்)

போயானளித்தலுங்கைகுவித்தேற்றபின்போற்றியன்பாற் ...*
சாயாதகொங்கையின்மேலணைத்தாடஞ்சைவாணன்வெற்பா...*
காயாமலரன்னமேனிமெய்யாகநின்கையுறையே... ... .......*
நீயாகவல்லதுமாந்தழையாகநினைந்திலளே... ... ... (௱௨௰௧)

(பாங்கிதலைமகற்குக்குறியிடங்கூறல்)

அணிமாமலர்மயிலைப்புயத்தூணங்கொளாகமெனு............ *
மணிமாளிகைவைத்தவாணன்வண்காவலன்மாறைவெற்பா ... *
துணிமாமரசதப்பாசறைவேலைச்சுடரவன்போற்... ... ... *
பணிமாமணிதிகழும்பகல்யாங்கள்பயிலிடமே... ... ...(௱௯௰)

(பாங்கிகுறியிடத்திறைவியைக்கொண்டுசேறல்)

நாமாவிழுந்திநறுமலர்க்குற்றநந்தாவனத்துத் ... ... ... ... *
தேமாவிளந்தளிர்செவ்வண்ணங்கொய்துசிலம்பெதிர்கூய் ... *
வாமனெடுங்கண்மடந்தைநல்லாய்தஞ்சைவாணன்வெற்பி... *
பூமாதவிப்பந்தர்வாய்விளையாடுகம்போதுகவே ........(௱௯௰௧)

(பாங்கிதலைமகளைக்குறியிடத்துய்த்துநீங்கல்)

கண்சாயல்கையுருக்கொண்டுதன்வேள்மயில்காந்தள்வள்ளி ...*
பெண்சாயவென்றனையென்றுசெவ்வேள்வரும்பவளம் ......*
வணசாபெயரிற்றும்வயற்றஞ்சைவாணன்மலயமராத் .. ......*
திணசாயைநின்றணங்குந்தையனீநிற்கசாலிமேல ..... (௱௯௰௨)

(இறைவியிறையோனிடத்தெதிர்ப்படுதல்)

மயங்கியநூபுரப்பட்கடந்தாளுமுலைசுமந்து ... ... ... ... *
தயங்கியநூலிடைதாளுமென்பாலதுகளர்வுறுமிங் ... ... *
கியங்கியவாறென்மனத்திருணீக்கவென்றெறுணர்ந்தோ ... *
வயங்கியசீருடையான்வாணன்மாறைமணவிளக்கே.....(௱௯௩)

(புணர்ச்சியின்மகிழ்தல்)

தருந்தாருவஞ்சங்கொடையுடையான்றஞ்சைவாணனின்சொற் *
செருந்தார்பசுந்தமிழ்த்தென்வரைமேற் செம்பொன்மேருவெ
கருந்தாரணசுமிழ்வாசுகியால்வெண்கடல்கடைந்து * [ற்பாற்
வருந்தாவமுதளித்தாள்வல்லமாயிம்மடக்கொடியே.....(௱௯௪)

(புகழ்தல்)

மயனூர்விதித்தன்னமாமதில்சூழ்தஞ்சைவாணன்வெற்பிற் ...*
பயனூர்பமியாதாரப்பாவையன்னீர்பசும்பொற்குழைதோய் ...*
நயனூரவிந்தத்துநஞ்சுநும்வயிதழ்நல்லமுத ... ... ... ...*
மயனூர்படைநதிலம்ரலடங்காதவ்வாறுநூற்குமே ... ... ... ()

(தலைமகளைத்தலைமகன்விடுத்தல்)

நேயம்புகலிடம்யானின்பால்வந்துநின்றதுபோ ... ... ...*
லாயம்புகலவடைந்தருணீயடையாதமன்னர் ... ... ...*
வாயம்புகலில்வணக்கியவாணன்றென்மாறைநன்னீர்த் ... ..*
தோடம்புகரிபூவேல்விழியாய்நின்றுணையுடனே..... (௱௯௬)

(பாங்கிதலைவியைச்சார்ந்துகையுறைகாட்டல்)

பொய்போலிடைநின்விழிபோற்குவளையம்போதிவைநின் ... ✻
மெய்போலசோகந்தளிர்பூந்தழையிவைமெல்லியனின் ... ...✻
கைபோற்கவின்கொள்செங்காந்தளம்போதிவை கொண்டருள்யான்
மைபோற்குழலிதந்தேன்றஞ்சைவாணன்வரையினின்றே... ()

(தலைவியைப்பாங்கிற்கூட்டல்)

குனிநாண்மதிநுதற்கோகிலமேநின்குழலிலெல்லாப் ... ... ✻
பனிநாண்மலருமபறித்தணிந்தேனிந்தப்பார்மடந்தை ... ...✻
தனிநாயகன்றஞ்சைவாணன்றண்சாரற்றனித்துநில்லா.........✻
இனிநாயகன்றிளையாற்விளையாடிடமெய்த்துறுமே..... (௱௩௰௮)

(நீங்கித்தலைவற்கோம்படைசாற்றல்)

சின்னாண்மலர்க்குழல்காரணமாச்செவ்விபார்த்துழன்று... ...✻
பன்னாளாத்தபன்மொழிநோக்கிப்பழிநமர்க்கே ... ... ... ✻
தென்னாரிடைப்பட்டவென்னிலைநீமறவேலிறைவா ... ... ...✻
தன்னாகமெய்ப்புகழான்றஞ்சைவாணன்றமிழ்வெற்பிலே ... ()

(உலகியன்மேம்படவிருந்துவிலக்கல்)

வலைப்பெய்தமான்றஞ்சைதேன்றேய்த்தருந்திமணாறுமலைப்பா✻
லுலைப்பெய்தவார்தினைமூரலுமுண்டொள்கூருவகை ... ... ✻
தலைப்பெய்தநாளினையானதஞ்சைவாணன்சயிலத்தெம்மூ ... ✻
ரிலைப்பெய்ததாழ்குரம்பைத்தங்கினாலுமக்கெய்வருமே.....()

(விருந்திறைவிரும்பல்)

மஞ்சூட்டியன்னசுவைதமதில்சூழ்தஞ்சைவாணன்வெற்பிற் ... ✻
பஞ்சூட்டியமென்பதயுகத்திருங்கள் பாடியினமான் ... ... ✻
வெஞ்சூட்டிழுதன்னவூனுமடைந்தேனும்விருந்தினர்க்குச் ...✻
செஞ்சூட்டிளகுபொன்போற்றினைமூரலுந்தெள்ளமுதே ... ()

பாங்கியிற்கூட்டமுற்றிற்று,

❧✻❧

ஒருசார்பகற்குறி.

(இழவோன்பிரிந்துழிக்கிழத்தி மாலையம்பொழுதுகண்டிரங்கல்)

ஆழ்ந்தார் தமக்கருளாதவர்போலிவ்வளவிலன்பு ... ... [து
சூழ்ந்தார் செலத்தெதங்கல்சூழ்குழலாய்சொற்பொருள்படைத்து
வாழ்ந்தார்புகழ்தஞ்சைவாணனைப்பேணலர்மானவெப்போயான் ✻
வீழ்ந்தார் கலிக்கரந்தான்பனிமாலைவெளிப்படவே... ...(௱௪௨)

(பாங்கிபுலம்பல்)

காலையம்போருகவான்முகத்தாளன்பர்வகையகல ... ... ✻
மாலையம்போதுவருவிகுதநீர்தஞ்சைவாணன்றெவ்வ ... ...✻
ராலையம்போலுக்களாதவன்கோயில்புல்கொருந்து... ... ✻
வேலையம்போழ்விற்பிரிந்தோனெஞ்சமெவ்வத்துயிர்த்தே - ()

(தலைவனிடத்தலைவிவருந்தல்)

பூராதவின்பவிடந்தொறுநீங்கியவாயமென்பாய் - - - *
வாராதமுன்னம்வருகிலராற்றஞ்சைவாணன்வெற்பிற் - - *
கூராதரநல்கிவல்வினையேனலங்கொள்ளைகொண்டு - - - *
தேராதவனுடனேநென்னன்மாலையிற்சென்றவரோ - - ()

(தலைவியைப்பாங்கிகழறல்)

சிறந்தார்தெரிந்தசெழுந்தமிழ்வாணன்றென்மாறைவெற்பர் *
துறந்தாரெனையென்றுசோருவதேனிந்தத்தொல்லுலகிற் ... *
பிறந்தாரெவர்க்கும்பிரிவெய்துமால்வெய்யபோரமர்க்கட் ... *
புறந்தாழ்கரியகுழற்செய்யவாயையபூங்கொடியே ... ...()

(தலைவிமுன்னிலைபுறமொழிதல்)

பூவலர்வாவியினீரற்றபோதுற்றபுன்மையல்லாற் - - - *
காவலர்காமந்துறக்கிலென்றுங்கடம்பாய்மதுகை - - - -*
மாவலவாணன்வயற்றஞ்சைவேந்தனைவாழ்த்தல்செய்யா - - *
மேவலர்போலுட்கழற்றுணையாளர்வியனறிவே - - - -()

(பாங்கியொடுபகர்தல்)

முலையார்முயக்கினுமல்லாவிடத்தினுமூரிமுந்நீ ... ... *
ரலையாரமுதமுநஞ்சமும்போலவணங்கனையாய்- - - - *
தொலையாதவின்பமுந்துன்பமுங்காட்டுவர்தூங்கருவி - - *
மலையாசலத்தமிழ்த்தேர்வாணன்மாறைநம்மன்னவரே - - -()

(பாங்கியச்சுறுத்தல்)

பேணற்கரியநின்பெண்மையுநாணும்பேணியவர் ... *
காணத்தகுமென்றுகாணபதல்லாற்சூழிநாதனெஞ்சு... ...*
பூணத்தருகினும்பொற்பல்லவாருதல்கற்பல்லவால் ... *
யாணர்த்தமிழுடையான்வாணன்மாறையிலின்னமுதே ... ()

(நீங்கற்கருமைதலைவிநினைந்திரங்கல்)

குன்றுகியபொன்னும்வேழக்குழாமுங்கொடைபுகழ்ந்து *
சென்றார்முகக்குஞ்செழுந்தஞ்சைவாணன்றென்மாறைவெற்பி
னன்றுபிறைவற்குநன்றியிலேற்குமுன்றுன்முகத்தே [ற்
றொன்றுவிருத்துமனையிர்போயுடம்பையும்ம- (௱௪௧)

(தலைவிக்கவன்வரல்பாங்கிசாற்றல்)

நெஞ்சுகவாய்மலரன்னகணணீர்மல்கநின்றவஞ்சொற் ... *
கிஞ்சுகவாய்வஞ்சிகேட்டருணீயுங்கிளைத்தமிழோர்... ... ... *
தஞ்சுகவாய்மொழிநெஞ்சுடையான்றஞ்சைவாணன்வெற்பின் *
மஞ்சுகவார்த்தனவாலவர்தேரின்மணிக்குரலே ... ... ... ...()

(சிறைப்புறமாகச்செறிப்பறிவுறுத்தல்.)
தொடைக்கணியார்தடந்தோளவர்கேளலர்தோகையன்னீ ... *
ருடைக்கணியாந்தலைழகொய்யாருபூவருடைத்ததெண்ணீர் ... *
மடைக்கணியாரமிடுந்தஞ்சைவாணன் வரையின்முன்போற் *
கடைக்கணியார்கணியார்நம்மைநாளைக்கருங்கணியே ... (௱௩௧)
(முன்னிலைப்புறமொழிமொழிந்தறிவுறுத்தல்)
பயில்காளபந்திப்புயலன்னவோதியைப்பைங்கிள்ளைகாண் ... *
மயில்காள்சிறிதுமறக்கப்பெறீர்தஞ்சைவாணன்வெற்பிற் ... *
குயில்காளமெங்குமியம்புதண்சோலையிற்கூடியின்ப ... ... *
மயில்காளவெங்கதிர்வேலன்பர்சாலவயர்ப்பினுமே..... (௱௩௨)
(முன்னின் றுணர்த்தல்)
கானலங்கான்மலர்க்கள்வாய்க்கருங்கணிகட்டுணையாற் ... ... *
கூனலஞ்சாய்பொற்குரலுங்கொய்தாமரைகொற்றவயா ......*
மேனலங்காவலுமின்றேயொழிந்தனமேம்பவிக்குந் ...... ...*
தானலங்காரமன்னன்றஞ்சைவாணன்றமிழ்வெற்பிலே ... ...()
(முன்னின் றுணர்த்தியோம்படைசாற்றல்)
கனஞ்சாயநல்கிபகையுடையானைதிர்கன்றினர்தம்... ... ...*
மனஞ்சாயவென்றருள்வாணன்வரோதயன்மாறைவெற்பிற் ...*
சினஞ்சாலும்வேலண்ணலேமறவேலெம்மைச்செவ்வியிரு...*
தனஞ்சாயினுமினிநின்னையல்லாதில்லைத்தாழ்குழற்கே (௧௩௪)
(கிழவோன்றஞ்சம்பெறுதுநெஞ்சொடுகிளத்தல்)
ஏவலரேய்விழிமாந்தளிர்மேனியமானலினிக் ... ... ... *
காவலரேமனங்காத்தனம்யாங்களியானைசெம்பொ... ... ...*
நாவலரேபெறநல்குங்கைமேகநறுங்குவளை ... ... ... *
மாவலரேய்தொடையான்றஞ்சைவாணன்வரையில்வந்தே ...()
ஒருசார்பகற்குறிமுற்றிற்று

பகற்குறியிடையீடு

(இறைவனைப்பாங்கிகுறிவரல்விலக்கல்)
புனமும்பசுந்தினைச்செங்குரலேந்தும்புகன்றகிள்ளை ... ... *
யினமுங்குழீஇவந்திறைகொள்ளுமாலிறையார்வளையு ... *
மனமுங்கவர்வெற்பவாணன்றென்மாறைமடப்பிடியு... ... *
மனமுந்தொழுநடைபாற்பலகால்வருமன்னையுமே ... ... ()
(இறைவியைக்குறிவரல்விலக்கல்)
நந்துசுற்றுங்கடன்ஞாலமெல்லாம்புகழ்நாமன்வளர்... ... *
சந்துசுற்றுங்கொங்கைமங்கையர்வேள்சஞ்சரீகநறை ... ... *
வந்துசுற்றுந்தொங்கல்வாணன்றென்மாறைவரையின்மலர்க் *
கொந்துசுற்றுங்குழலாய்செல்லணியக்குளிர்பொழிற்கே......()

## இரவுக்குறி.

(இறையோனெறியினைத்தெளிமைகூறல்)

வடிவரிநீள்கண்ணியஞ்சலம்யாந்தஞ்சைவாணன்வெற்பிற் ...
கொடுவரிகேழற்குழாம்பொருகொல்லையுங்குஞ்சரந்தேர்ந் ...
நடுவரிதூவுமடுக்கமுஞ்சூர்வழங்காறுமைவாய்க் ... ... ...
கடுவரிநாகந்தவழ்மல்குகல்லளைக்கானமுமே ... ... ... ()

(பாங்கியவளூட்டணியியல்பாங்கிசாற்றல்)

பூந்தழையாதுமலைமலர்யாதுபுனையிழையுஞ் ... ... ...
சாந்தமும்யாதுதடம்பொழில்யாதுதரணியின்மேன் .........
மாந்தரில்வேளன்னவாணன்றெனமாறைவளநகர்சூழ் ... ...
தேந்தருசோலைவெற்பாவுங்களூட்டிறைசெல்வியர்க்கே ......()

(கிழவோனவளூட்டணிபியல்வினாதல்)

எந்நாட்டவரணிகூறிலயல்பேறிநகிகல்வடிவேன் ... ... ...
மைந்நாட்டமெல்லமுத்தவாணைசையாய் தஞ்சைவாணன் மெலி
லுந்நாட்டரிவைய ராடிடஞ்சாந்தமொளியிழைபூ ... ... [மே
மெய்ந்நாட்டழைபொடெல்லாமொழியாமல்மொழி எனக்கே

(அவற்குத்தன்னூட்டணியியல்பாங்கிசாற்றல்)

வலைகொண்டமாந்தழைகாந்தளம்போதுமரப்பின்முத்தந்
தலைகொண்டசந்தனச்சாந்துமன்றுவர்தஞ்சையர்கோன்
மலைகொண்டதெவ்வலாவென்கண்டவாணன்வெற்பாவெமதூர்
நலைகொண்டவல்லியன்றொல்லிநாகநறுநிழலே ... ...(௧௬௮)

(இறைவிக்கிறையோன்குறையறிவுறுத்தல்)

புயலேறதிர்தொறும்பொங்குளைமீதெடுப்போதகந்தேர்ந் ...
தியலேறதிருமிருங்கந்தல்வாய்முத்தமீன்றுசங்கம் ... ...
வயலேறணைவளருந்தஞ்சைவாணன்வளாயிலுண்கண் ...
கயலேறனையநின்பால்வரல்வேண்டினர்காதலரே ... ...(௧௬௯)

(நேராதிறைவிநெஞ்சொடுகிளத்தல்)

விடவார்கணைவிழிமெல்லியன்மாதனாமேநிளியோர் ... ...
வடவாரொனுமுனாவாய்மைநெஞ்சேதஞ்சைவாணன் வெற்பிற்
கடவாரணந்திரிகங்குனங்கணணன்காதலர்மூட் ... ... ...
பிடவார்சிறுநெறிவாய்வரல்வேண்டினள்பெண்ணணங்கே ...()

(நேரிழைபாங்கியொடுநேர்ந்துரைத்தல்)

வெங்குலவாரணமேற்றவர்க்கேநல்கிவேற்றரசர் ... ... ...
தங்குலவாழ்வுதவிர்த்தருள்வாணன்றமிழ்ச்சிலம்பிற் ... ...
எங்குலவாவினர்காதலராயிற்களிப்பயந்த ... ... ... ...
கொங்குலவாவவர்க்குந்தகுழலியென்சொல்கூறவதே ..... (௧௭௪)

## இரவுக்குறி.

(நேர்ந்தமைபாங்கிநெடுந்தகைக்குணர்த்தல்,)

பரவாதவண்ணம்பரவியும்பாதம்பணிந்துநெஞ்சங் ... ...*
கரவாதபொன்னைநின்காரணமாகக்கைக்கலையென்றே *
வரவாதளனஞ்சும்வெண்மாளிகைத்தஞ்சைவாணன்வெற்பா *
விரவாதவண்ணமெல்லாமிரந்தேனிவ்விரவிடையே ... (௱௭௨)

(குறியிடைநிறீஇத்தாய்துயிலறிதல்)

மாகந்தரியலர்க்கீந்தருள்வாணன்றென்மாறைவெற்பின் ... *
மேகந்தருமின்னிடையன்னமேவிலாநாண்மலர்வேய் ... *
தாகந்தழுவுங்குடம்பையின்வாய்நடுநாளிரவிற் *
சோகந்தவிர்விலவாய்த்துயிலாததென்றேனைகளே ... (௱௭௩)

(இறைவிக்கிறைவன்வரவறிவுறுத்தல்)

கந்தாரநாணுங்கனிந்தசொல்லாய்நங்கடிமனைக்கே, ... ...*
வந்தாரவாவின்பெருமையினாற்றஞ்சைவாணன்வெற்பிற் ... *
கொந்தாரசோகந்தருஞ்செழும்போதுங்கொழுந்தழையுந். *
தந்தாரகலந்தழீஇயகலாதணைந்தவரே... ... ... ...(௱௭௪)

(அவட்கொண்டுசேறல்)

மின்னேயயிலொடுமின்விளக்காவந்தவெற்பனைநாம் ... ...*
பொன்னேயெதிர்கொளப்போதுகம்வாபுவியேழினுக்குந் ...*
தன்னேயம்வைத்தருள்சந்திரவாணன்றமிழ்ச்சிலம்பி. ... ... *
னின்னேரியன்மயில்கண்டுயிலுகநிழலகத்தே ... ...()

(குறியுய்த்தகறல்)

மந்தாரமன்னகைவாணன்றென்மாறைமயிலனையாய் ... ...*
நந்த வனப்பொய்கைநான்காப்தவேன்குழலுனுங்கங்குல் *
கொந்தார்தெரியனின்செங்கனிவாயொடுங்கொங்கையொடும், *
பைந்தாமலரையுஞ்சேதாம்பலையும்பலகப்பித்ததே... ...()

வண்டுறைதாரோன்வந்தெதிர்ப்படுதல்

மூதிராமிலையிப்பணியந்தகாரமுனியவல்ல ... ... ... ...*
கதிராயிரமில்லையேழ்பரித்தேரில்லைக்காவல்வெய்யோற், ...*
கெதிராதல்சோமற்கிலையவதன்றேநாம்மில்யார்திறந்தார் ...*
மதுராபுரித்தமிழ்தேர்வாணன்மாறைதனத்துவந்தே, ......()

(பெருமகளாற்றினதருமைநினைந்திரங்கல்.)

செழியன்கயலைத்திசைவைத்தவாணன்றென்மாறையென் மேற்.
கழியன்புடையநின்கால்கண்களாவக்கராம்பயிலுங்...... ......*
குழியன்றியும்வெஞ்சுழியொன்றும்யாறுங்குழீஇக்கொடிதாம்*
வழியன்பதீபெக்கனேவந்தவாதிம்மழையிருளே... ... (௱௭௮)

(புரவலன் றேற்றல்)

வெயிலுந்தரவிந்தமென்மலரன்னமும்விந்தைவெற்றி ... ✻
மயிலும்பயில்புயன்வாணன்றென்மாறைநின் வாள்விழிபோ ✻
லயிலுங் குயின்மொழிநின்னிடைபோன்மின்னுமாடளிகள் ✻
பயிலுந்தொடைநின்குழல்போலிருளைப்பருகினவே, (௩எ௯)

(புணர்தல்.)

சுழிநீரலைகடற்றொல்லுலகேழினுந்தோற்றும்வண்மைக் ... ✻
கழிநீடுமாடகமேருவின்மீதினுங்காவல்கொண்டு ... ... ✻
வழிநீள்புகழ்கொண்டவாணன்றென்மாறைவனாயின்மலர்ப் ✻
பொழினீழலும்பரமுதனையரனைப்புணர்ந்தனமே... (௩அ௰)

(புகழ்தல்.)

மன்னூர்பெரும்புகழ்வாணன்றென்மாறைவனாபயிலுந் ...✻
தண்ணாரமுங்கமழ்சார்வருஞ்சாரலிற்சார்ந்துறையும் ... ✻
பெண்ணாரணங்கன்னநின்முகந்தான்கண்டபின்னுமுண்டோ ✻
கண்ணார்தடங்களின்வாயொடுங்காதகமலங்களே... ... (௩அக)

(இறைமகளிறைவனைக்குறிவிலக்கல்)

ஊரற்கதிர்முத்தவார்முலையாவிழழ்கததனியே ... ✻
வாரற்கநீதஞ்சைவாணன்வெற்பாவயமாவழங்கும் ... ... ✻
வேரற்கடியகவலையினூடுவெயிலவற்குஞ் ... ... ... ✻
சாரற்கருமையதாலிருள்கூருமெஞ்சாரலிலே ... ... ... ()

(அவனிறைவியையில்வயின்விடுத்தல்)

மல்லையம்போர்வென்றவாணன்றென்மாறைநின்மாளிகையாந் ✻
தொல்லையம்போருநந்தேடவுங்கூடுந்தொடித்தளிரான் ... ✻
முல்லையம்போதுமுகையுங்கொய்யாதுமுகிழ்முலையாய் ... ✻
செல்லையம்பொறபளிங்கிற்றலம்பாதஞ்சிவப்பிக்கவே ... ()

(இறைவியையெய்திப்பாங்கிகையுறைகாட்டல்)

முகையாபலராய்முலைக்குநின்வாய்க்குமுறைமுறையே ... ✻
பகையாமுளரியுஞ்சேதாம்பலுமிவைபைங்கழுநீர் ... ... ✻
வகையார்தொடைபுனைவாணன்றென்மாறையின்மௌவலன்ன,
நகையாயவையிவைநின்குழற்காமுல்லைநாண்மலரோ (௩அச)

(இற்கொண்டேகல்)

ஒல்காவிருண்மணந்தொல்கரும்போழ்துணர்ந்துநம்மை...✻
நல்காயியல்பன்னைநாடினுநாடுநடந்தருணீ ... ... ... ✻
மல்காவிசூழ்தஞ்சைவாணன்றென் மறையின்வள்ளையின்மேற்
செல்காவியன்னவிழித்திருவேநின்திருமனைக்கே ... (௩அரு)

[பிற்சென்றிறைவனைவரவுவிலக்கல்.]

வெம்போர்முருகென்னவேல்வலனேந்திவெறிதிங்ஙனே ...*
வம்போர்நகரொல்லிவாரல்வெற்பாமருவாவரசர் ... ...*
தம்போர்கடந்ததடம்புயவாணன்றமிழ்த்தஞ்சைநாட் ... *
டம்போருகமல்லவோதிருக்கோயிலணங்கினுக்கே ... ...()

(பெருமகன்மயங்கல்.)

வஞ்சங்கலந்தகலிவென்றவாணன்றென்மாறைவெற்பிற். ...*
றஞ்சங்கவந்தசொற்றையலும்யானுந்தனித்தனியே ... *
நெஞ்சங்கலந்தநிலைமையெல்லாங்கண்டுநீயமுதி ... ... *
னஞ்சங்கலந்தனையேநனைவார்குழனன்னுதலே ... ... ()

(தோழிதலைமகடுயர்கிளந்துவிடுத்தல்)

முன்னூரரவுந்தெரியாவிருணெறிமுன்னிறைய... ... ... *
மின்னூர்புனையிழைமின்னனையாருய்யவேலின்வெம்போர்...*
மன்னூர்களிறுதிறைகொண்டவாணன்றென்மாறையன்ன ... *
நின்னூரகம்புகுந்தாற்குறிகாட்டுநெடுந்தகையே..............()

(திருமகட்புணர்ந்தவன்சேறல்.)

இருங்குன்றனமதிலெம்பதிக்கேகலெளிதுசைம்மை ... ...*
தருங்குங்குமமுலைத்தையலாய்தஞ்சைவாணன்வெற்பிற் *
கருங்குஞ்சரவினம்வெண்சிங்கவேறஞ்சுங்கங்குலினம் ... *
மருங்குஞ்சுடர்விளக்காமடவார்குழைமாணிக்கமே ... ()

(இரவுக்குறிமுற்றிற்று)

(இரவுக்குறியிடையீடு -- இறைவிக்கிகுளையிறைவரவுணர்த்தல்)

கயல்வென்றவுண்கண்ணிகாரணமேதுகொல்கைதையங்கா ...*
னயனின்றபுன்னையினன்னமெலாமடலாழியங்கைச் ... ...*
சயமங்கைதன்பெருமான்றஞ்சைவாணன்றரியலர்போற் ... *
றுயரம்பெருகியிராவொருபோதுந்துயின்றிலவே.... ... (௧௧௰)

(தான்குறிமருண்டமைதலைவியவட்குணர்த்தல்)

பேசத்தருவதொன்றன்றுகண்டாய்பிறிதோர்குறியை........*
நேசத்தவர்குறியென்றுசென்றியான்குறிநின்றுவந்தேன் ... *
வாசத்தமிழ்புனைதோளுடையான்றஞ்சைவாணனொன்னார் ... *
தேசத்தவருமெய்தாவெய்யநோயெய்திச்சேயிழையே......()

(பாங்கிதலைவன்றீங் கெடுத்தியம்பல்)

வடியோவெனுங்கண்மடந்தைநல்லாய்தஞ்சைவாணனைவந் ...*
தடியோமெனச்சென்றடையலர்போலயர்கின்றநின்கைத் ... *
தொடியோடுமென்பணைத்தோளிணைவாடுந்தொழில்புரிந்த ...*
கொடியோர்துணிந்துசெய்தார்குறிபாதகுநமக்கே........()

(புலந்தவன்போதல்)

தேனூற்றவாகையந்தார்த்தஞ்சைவாணனைச்சேரலர்போன் ...※
மானூற்றபார்வைமயில்பொருட்டாகவழிதெரியாக் .. ......※
கானூற்றயானற்கனையிருள்வாய்வரக்கற்பித்தநீ ... ... ... ※
யானூற்றநோய்களெல்லாம்படுவாயினியென்னெஞ்சமே ......()
(புலர்ந்தபின்வறுங்களந்தலைவிகண்டிரங்கல்)
தாதகைதண்டலைசூழ்தஞ்சைவாணன்றடந்துறைவாய்... (ணீபூங்
நீதகைகொண்டென்முன்னின்றனையேசெந்நிறக்கனிவாய் ... ※
மேதகுமுள்ளெயிற்றேண்முலைக்கொங்கைவெண்டோட்டுமெ
கேதகையென்னுநல்லாய்கொண்கர்மாலைகிடைத்ததன்றே...()
(தலைவிதன்றுணைக்குரைத்தல்)
வரலிங்கரியமயங்கிருள்யாமத்துள்வந்திளவேய்... ... ... ※
நரலுஞ்சிலம்பர்நவமணியாழிநறவுண்வண்டு... ... ... ...※
முரலுந்தளையவிழ்மொய்ம்மலர்க்காந்தளஞ்செம்மலர்க்கை... ※
விரலென்றுகொல்செறித்தார்நெறித்தாள்குழல்மெல்லியலே ()

(இதுபிறசெய்யுட்கவி--தலைமகளவலம்பாங்கிதுணித்தல்)
பொய்யாதவர்தங்குறிபிழையாரவர்பூண்டவன்பு ... ... ... ※
மெய்யாதறேறியழுங்கண்மின்னேபுயவெற்பிரண்டான்... ...※
மையாழிவையநிலையிட்டவாணன்றென்மாறைவெற்பி ... ※
ஐய்யானமென்கழுநீர்நறுமாலையுடைத்தல்லவே... ... ... ()
(இறைவன்மேற்பாங்கிகுறிபிழைப்பேற்றல்)
விம்மூர்துயர்க்கடல்வெள்ளத்துள்ளேயெம்மைவீழ்வித்துநீ ※
ரெம்மூரகத்துவரலொழிந்தீரொருதோற்றதெவ்வர் ... ... ※
தம்மூனாமுப்புரமாக்கியவாணன்றமிழ்த்தஞ்சைபோ... ...※
லும்மூர்வரத்துணிந்தேதமன்பகூறுமவ்வூர்மாமக்கே... ... ()

(இறைவிமேலிறைவன்குறிபிழைப்பேற்றல்)

துறந்தனளாகியம்போருகந்தன்னையித்தொல்வரைமேற் ......※
பிறந்தனளாகும்பெருந்திருமாதெனப்பேதையரிற் ... ... ※
சிறந்தனளாதலிற்செந்தமிழ்வாணன்றென்மாறையன்னாண் ※
மறந்தனளாயினும்யாமொருபோதுமறவலமே ... ... ()
(அவர்குறிமருண்டமையவளவற்கியம்பல்)
தன்னையாவரும்புகழத்தரும்வாணன்றமிழ்த்தஞ்சைமா ... ※
னன்னையாளவள்குறியாமென்றேநினைந்ததல்லதொன்று ... ※
நினையாவருங்கங்குலின்குறியாவந்துநின்றதுநம் ... ... ...※
வினையால்விளைந்ததென்றேவெறிதேதபண்படீண்டனமே ... ()

(அவன்மொழிக்கொடுமைசென்றவளவட்கியம்பல்.)

பல்லியம்போலுருமேறெங்குமார்ப்பதும்பார்ப்பதின்றி......*
வல்லியம்போதகம்போர்பயில்கான்வந்தவாணன்றஞ்சை...*
யல்லியம்போருகையன்னநின்கேளருளாசையினின் ... ...*
றெல்லியம்போதுசென்றேனென்றுகேள்வரியம்பினரோ (௨௱)

(என்பிழைப்பன்றென்றிறைவிநேர்தல்)

வியலூரொயிற்புறநொச்சியினூழ்மலர்வீழ்தொறெண்ணி ... *
மயலூர்மனத்தொடிவைகினன்யான்றஞ்சைவாணன்வெற்பர் *
புயலூரிருட்கங்குல்வந்தவமேநின்றுபோயினரொன் ... ...*
றயலூர்நகைக்குமென்னேயென்னபாவங்கொலாக்கினவே ...()

(தாய்துஞ்சாமை)

ஆழியகன்புவியுள்ளனயாவுமடங்கிநள்ளென் ... ... ...*
றாழிமுடிந்தனவோங்கிருள்யாமத்துமோலிடையினுந் ... *
தாழியினும்போதலர்தஞ்சைவாணன்றரியலர்போற் ... ...*
றோழிநம்மன்னைகண்ணேதுயில்கோடலுறந்தனவே ... ()

(நாய்துஞ்சாமை)

தண்ணென்புனல்வையைசூழ்தஞ்சைவாணன்றரியலர்போற் *
பெண்ணென்பிறவியும்பெறுடைத்தன்றிப்பெரும்பதிநங் ...*
கண்ணென்பவர்வரக்கங்குலிஞாளிக்கணங்குரைத்துத்... ...*
துண்ணென்கடுங்குரல்வாயன்னைதுஞ்சினுந்துஞ்சிலவே ... ()

(ஊர்துஞ்சாமை)

ஓங்கண்ணல்வெம்பகடுந்திவந்தோரையுடன்றுதும்பைத் ...*
தேங்கண்ணிசூடிச்செருவென்றவாணன் றென்மாறையின்னே
தாங்கண்ணனையர்தமைப்பிரிந்தோர்நந்தனிலைகண்டோ ... *
நாங்கண்ணுறங்கினுமோவுறங்கார்கண்ணகரவரோ... ... ... ()

(காவலர்கடுகுதல்.)

புயற்கண்ணியதலைப்பூகமெல்பாளைப்புதுமதுநீர் ... *
வயற்கண்ணுறைதஞ்சைவாணன்றென்மாறை யில்வஞ்சியன்னா
கயற்கண்ணிணையஞ்சிநீர்மல்கக்காவலர்கைப்பறையின் .....[ள்
செயற்கண்ணிணையல்லவோபடுகின்றனதிண்கடிப்பே ... ...()

(நிலவுவெளிப்படுதல்)

தெண்பாற்கதிர்முத்தவெண்ணகையாய்த்திகிரிக்கிரிசூழ்... ...*
மண்பாற்புகழ்வைத்தவாணன்றென்மாறை நம்மன்னர்பொற்
பண்பாற்பரிக்கும்பரிவருமாறென்பரந்ததிலா ... ... [றேர்
வெண்பாற்கடலிலைவம்பதிலேழுமிதக்கின்றவே ... (௨௱௯)

(கூழைகுழறுதல்.)

தம்பேறுடைமையிருக்கின்றவாகடன்ஞாலத்துள்ளோர் ... *
தம்பேறெனவந்தசந்திரவாணன்றரியலர்போல்...... .... *
வம்பேறுகொங்கைமயிலியனுமஞ்சமன்றமராங்... ... ... *
கொம்பேறிநள்ளிருள்வாய்க்குழறுநின்றகூழைகளே... (உ௱௭)

(கோழிகுரற்காட்டுதல்)

மன்பதைபுய்யவருந்தஞ்சைவாணன்றென்மாறைவெற்பர்... *
கொன்பதிவேல்வலங்கொண்டுவந்தாற்றங்கள்கோணடந்தா... *
னென்பதுதேறியிடையிருளூடையெழுப்பும்வெம்மூட்... *
பொன்பதிதாள்வளைவாய்ச்செய்யசூட்டுவன்புள்ளினமே ()

இரவுக்குறியிடையீடுமுற்றிற்று.

வரைதல்வேட்கை... தலைமகளைப்பாங்கிபருவரல்வினவல்,

விண்டார்பதிகொண்டவேற்படைவாணன்விரைகமழ்பூந்... *
தண்டாமரைமங்கைதங்கியதஞ்சைநின்றுயர்தம்மோ... ... *
டுண்டாகியமுனிவோவன்றியாயத்தொடிற்றதுண்டோ... ... *
வண்டார்குழலிசொல்லாய்செல்வதேதுன்மனத்திடையே ...()

(அருமறைசெவிலியறிந்தமைகூறல்)

மாணிக்கமென்கொம்பபொன்சொல்லுமேகன்றஞ்சைவாணன்வெ
பேணிப்புணர்ந்துபிரிந்தபின்றேன்றலும்பேதைமுகம் [ற்பர்
பாணித்தலின்றிமதிகண்டுநாணியபங்கயம்போ ... ... ... *
ஞணிக்கவிழ்ந்ததனுலரிந்தாளன்னைநங்களவே ... ... (உ௱௰)

(தலைமகன்வருந்தொழிற்கருமைசாற்றல்)

ஓவலில்வாயன்னைஞாளியிவ்வூர்களுறங்கினுமூர்க் ... ... *
காவலர்காய்வர்நிலாமதிகாலுங்கடுங்குடிஞைச் ... ...... ...*
சேவலும்வாரணமுந்தஞ்சைவாணனைச்சென்றிறைஞ்சா ...*
மேவலர்போல்வெய்யவாயடையாவென்மெலிவறிந்தே(உ௱௰௧)

(தலைமகனூர்க்குச்செலவொருப்படுதல்)

நம்பானலனுண்டநம்பாதகர்தந்நகர்வினவித்... ... ......*
தம்பாலுடன்சென்றுசார்குவமோதரியாரைவென்று... ... *
வம்பார்கழல்புனைவாணன்றென்மாறைவளரும்வஞ்சிக்... ...*
கொம்பாகியமருங்குற்கரும்பாமொழிக்கோமளமே... ......()

(பாங்கியிறைவனைப்பழித்தல்)

வறியார்புகழ்தஞ்சைவாணன்றென்மாறைமடந்தையன்று... *
ளறியாடியர்முன்னறிந்தவர்தாமதனலழலின்... ... ... ... *
பொறியாருயிர்வெம்பணிமாடணியும்புதையிருள்கூர் ... ...*
நெறியாரருள்பெறநாநடுநாளிடைநீந்துதுமே... ... (உ௱௰௩)

(இறைவியிறையேன்றன்னைநேர்ந்தியற்படமொழிதல்)

பணராவிரகமும்போகாவிரவும்புணர்முலைமே... ...... ... *
விணரார்பசப்பும்பிறவுமெல்லாமிருள்கூர்ந்தறல்போல் ... *
வணரார்குழற்பிறைவாணுதலாய்தஞ்சைவாணன்வெற்ப ...*
ருணராதிருப்பதுவேவென்றுமல்லநம்மூழ்வினையே (௨௱௰௪)

(கனவுநலிபுரைத்தல்.)

இல்லாவருந்துயிலுண்டாயவரும்வந்தெய்திற்கங்குற் ... ... *
பொல்லாதசேவற்கடுங்குரலார்த்துப்புவிபுரக்கு ... ... ...*
மல்லார்புயன்றமிழ்வாணன்றென்மாறைமருவலர்போ ... *
லல்லாமைநெஞ்சந்தடுமாறநல்லிடையாக்கியதே ...*(௨௱௰௫)

(கவினழிபுரைத்தல்)

வாளினுநீள்விழிவாணுதலாய்தஞ்சைவாணன்றெவ்வி...... *
ருளினுநாளுநலந்தொலைவேனலகையாரயில்வேல்... ... ... *
வேளினுமோர்நல்வெற்பனுநீயுமென்னேனியினுந் ... ...*
தோளினுநோயறிவரறியாததென்றொல்வினையே, ... ... *

(தன்றுயர்தலைவற்குணர்த்தல்வேண்டல்.)

வரைப்பான்மதுரத்தமிழ்தெரிவாணன்றென்மாறைவையை *
நுரைப்பான்முகந்தன்னநுண்டுகிலாயிந்தநோயவர்க்கின்... *
றுரைப்பாருளரோவுயிரொய்தலாநமக்கூர்திரைசூழ் ... ... *
தரைப்பால்வளரும்புகழெய்தலாமவர்தங்களுக்கே ... (௨௱௰௭)

(துன்புறுபாங்கிசொல்லெனச்சொல்லல்.)

ஒல்லெனவேயென்னுறுதுயர்தாமுமுணரும்வண்ணஞ் ... *
சொல்லெனநீயினுசொல்லியென்பேறுன்றுயரமெல்லாம்... *
வல்லெனவேகொண்டகொங்கையர்வேடஞ்சைவாணன்வெற்பி*
லல்லெனவார்குழலாயறியாரல்லரன்பருமே... ... ... ... ( )

(அலர்பார்த்துற்றவச்சக்கிளவி.)

மலருந்தொடைவஞ்சிவஞ்சகமாதருமாரனும்வா ... ... *
யலருந்தடங்கையலருந்தொடாநிற்பவஞ்சிநெஞ்சம் ... ... *
பலரும்புகழ்தஞ்சைவாணர்பிரானைப்பணியலர்போற் ......*
புலரும்பெயருங்கண்ணீர்புலராதுபுலரினுமே ... ... ...( )

(ஆறுபார்த்துற்றவச்சக்கிளவி)

அரியுங்கரியும்பொருநெறிக்கோர்துணையாயவர்மேற் ... ...*
சொரியுந்திவலைதுடைக்கவென்றேகுழைதோய்ந்துநஞ்சம் *
வரியும்பயில்கண்ணிவாணன்றென்மாறைநம்மன்னர்வந்து *
பிரியும்பொழுதெல்லிவாய்வினையேன்மனம்பின்செல்வதே. *

(காமமிக்ககழிபடர்கிளவி)

மாதுற்றமேனிவரையுற்றவில்லிதில்லைநகர்சூழ் ... ... ... *
போதுற்றபூம்பொழில்காள்கழிகாளெழிற்புள்ளினங்கா ... *
ளேதுற்றழிதியென்னீர்மன்னுமீர்ந்துறைவற்கிவளோ ... *
தீதுற்றதெற்றுக்கென்னீரிதுவோநன்மைசெப்புமினே (௨௨௧)

(இதுபிறசெய்யுட்கவி
(தன்னுட்கையாறெய்திடுகிளவி.)

விண்டலையாவர்க்கும்வேந்தர்வண்டில்லைமெல்லங்கழிசூழ் ... *
கண்டலையேகரியாக்கன்னிப்புன்னைக்கலந்தகள்வர் ... ... *
கண்டிலையேவரக்கங்குலெல்லாமங்குல்வாய்விளக்கு... ... *
மண்டிலமேபணியாய்தமியேற்கொருவாசகமே ... (௨௨௨)

(இதுபிறசெய்யுட்கவி-.-நெறிவிலக்குவித்தல்)

ஈன்றாளினுமெனக்கன்புடையாய்சென்றிரந்துகொண்டு.... *
சான்றாண்மையன்பர்தமக்குரைநீதஞ்சைசகாவலனைத்... ... *
தேன்றாழ்வரைத்தமிழ்சேர்த்தியவாணனைச்சேரலர்க்குந் ...*
தோன்றாவிருங்கங்குனீவருமாறொழிதோன்றலென்றே (௨௨௩)

(குறிவிலக்குவித்தல்.)

வெற்றியவாலியவாணன்பிரான்றஞ்சைவெற்பகத்திற் ... ...*
பெற்றியசோலைப்பிறங்கிருள்வாரன்மின்பேலதயின்னு, ...*
முற்றியவேனற்படுகிள்ளையோட்டுமுறைமையளென் .....*
றெற்றியகாதலினிசைத்தாளன்னையென்றுரையை ... (௨௨௪)

(வெறிவிலக்குவித்தல்)

மின்னுதிடித்தவன்னைகொண்டாள்வெறிவிந்நதமங்கை... *
மன்னுண்மைமன்னியவாணன்றென்மாறைவரையில்வண்டியா*
மென்னுவசுணமிறைகொள்ளுநாடனெக்கருளான் ... ...*
முன்னாளருளியநோய்தணிப்பானின்றுமொய்குழலே (௨௨௫)

(பிறவிலக்குவித்தல்)

பொருபாஃமதியினைப்போன்மருப்பியானையிற் பொன்னொடி
பந், தருபான்மொழிவஞ்சிசாரவந்தார்தஞ்சைவாணன்வெற்பின்
னொருபாலொதுமலொன்னவெந்தீயுலையுற்றசெவ்வே ... ...*
லிருபான்மருங்கினுங்கொண்டெறிந்தாலொத்ததென்செவிக்கே

(குரவரைவரைவெதிர்கொள்ளுவித்தல்)

தற்பழியாமலுஞ்சந்திரவாணன்றமிழ்த்தஞ்சைநங் ... ...*
கற்பழியாமலுங்காரணமாகக்கயல்விழிநின் ... ... ... *
சொற்பழியார்நமர்சொல்லுவல்லேசென்றுசொல்லலையே ... *
விற்பழியாம்வழியாநமதாருயிர்க்கேதமுமே ... ... (௨௨௭)

வரைதல்வேட்கைமுற்றிற்று.

(வினவியசெவிலிக்கு மறைத்தமைவிளம்பல்)

துளராவிளமுலைதாங்குகில்லாதுதளரிடைகண் ... ... ...*
வளராதமெதன்கற்குல்வாராயெனத்தஞ்சைவாணன்வெற்பா ...*
விளரார்திருநுதலன்னைக்கொர்மாற்றம்விளம்பியுய்ந்தே ......*
னுளராமவர்வலையுட்பட்டுவாழ்வதுணர்ந்தருளே........(உஉஅ)

(அலரறிவுறுத்தல்)

மணிவரைமாளிகைமாறைவரோதயன்வாணன்வெற்பா ... *
பணிமொழியாளென்னுங்கொள்கொம்புமுடிப்படர்ந்தபலா *
ரணிமனைதோறுங்கொழுந்துவிட்டம்பலரும்பிமண்மேற் .... *
றணிவிலதாகவிப்போதலர்பூத்ததுன்றண்ணளியே ... (உஉக)

(தாயறிவுணர்த்தல்)

திரையிற்பவளம்வடவாமுகத்தெழுந்திக்கொழுந்நிற் ... ...*
கரையிற்படருங்கடற்றுறைநாடகயற்கொடிபொன் ... ... *
வரையிற்றிகழ்வித்தவாணன்றென்மாறைமலர்ந்தமௌவல் ...*
விரையிற்களவையெல்லாமறிந்தாளன்னைமெய்யுறவே ... ...()

(வெறியச்சுறுத்தல்)

மையுற்றநீலக்கண்மாமங்கைகொன்றஞ்சைவாணன்வெற்பி... *
னெய்யுற்றவேலென்பநீதணியாமையினெஞ்சினுள்ளே......*
யையுற்றயர்வுற்றெறம்மன்னையும்யாயுமென்றாரணங்கின் ... ...*
மெய்யுற்றநோய்தணிப்பான்வெறியாடல்விரும்பினரோ... ...()

(பிறர்வரைவுணர்த்தல்)

வெடிக்கின்றவிப்பியுணித்திலம்பைத்தலைவெம்பகுவாய்த் ... *
துடிக்கின்றதிங்களிற்றேன்றுந்துறைவசெஞ்சொற்புலவோர் *
வடிக்கின்றமுத்தமிழ்வாணன்றென்மாறையம்மான்மருங்கை*
யொடிக்கின்றகொங்கைகண்டாலவர்நெஞ்சுருகாதவரோ.....()

(வரைவெதிர்வுணர்த்தல்)

குருதிகண்டாலன்னகாந்தளஞ்சாரற்குறிவெறிதே...... ......*
வருதிகண்டாய்தஞ்சைவாணன்வெற்பாவெங்கண்மாநகர்நீ ...*
கருதிகண்டாமொடுந்தோன்றிலெங்கேளிர்நின்சொல்லிகவார்...*
பருதிகண்டான்மலராதொழிபாகயப்பங்கயமே ......(உ௱௩௩)

(வரையுநாளுணர்த்தல்.)

அலமம்பனைகண்ணிவள்கொங்கைமென்சுணங்காகிவண்டு... *
பலகம்பலைசெய்யப்பூத்தனம்வங்கைபனிவரைமேற் ...*
றிலகம்பதித்திருணச்செல்லவைத்தவாணன்றென்மாறைமன்ன *
னுலகம்பரிப்புகழ்போற்சிலம்பாமதிபூர்கொண்டதே ...()

(அறிவறிவுறுத்தல்.)

வனநாண்மூளரிமுகைவென்றவாணன்றென்மாறைவெற்பிற் *
கனநாணணிந்துபொற்கச்சறவீசிக்கதித்தெழுந்த ... ... *
தனநாணுநுண்ணிடைத்தையலல்லள்பழிசாற்றுவல்யா ... *
னெனநாணிநின்பழிதான்மறைத்தாளன்பவென்னையுமே (உ௬௫)

(குறிபெயர்த்திடுதல்.)

ஊடேறுர்பவரிக்குலாவளக்கூடும்வந்தெரணசிலம்பா... ... *
வேடேறுர்பொதும்பரிற்போய்விளையாடுகவேற்படையான் *
மாடேறுர்பகைவென்றவாணன்றென்மாறையெம்மன்னுதவப் *
பேடேறுர்வடிவுகொண்டாலன்ன நீயுமென்பேதையுமே (உ௬௬)

(பகல்வருவானையிரவு வருகென்றல்,)

முத்தணிநீலமணித்தகட்டின்ளெங்குமெய்கொளமேவ. ... *
வைத்தணிசேரவகுத்ததுபோற்றஞ்சைவாணன்வையைப் *
பைத்தணிவார்துறைமேதாய்கருந்தாட்புன்னைப்பாசிலைவெண் *
டொத்தணிபூந்துறைவா வருவாயிருடேங்கிடையே, ... (உ௬௭)

(இரவுவருவானைப்பகல்வருகென்றல்.

இழைவிளையாடுதுளமுலைசாயற்கிடைந்தமஞ்ஞை ... ... *
கழைவிளையாடுங்கடிப்புனங்காத்துங்கலையகலா ... ... ... *
குழைவிளையாடுமுயர்சிலம்பாவின்னுமுன்பொருட்டான் *
மழைவிளையாடுமதிற்றஞ்சைவாணன்மலயத்திலே ... (உ௬௮)

(பகலினுமிரவினும்பயின்றுவருகென்றல்,)

குரவுங்கணியும்விரம்வெற்பாவெப்பகுஞ்சரமேல்- ... ... *
வரவுந்தியதெவ்வைமாற்றியவாணன்றென்மாறையின்று ... *
மரவும்பணியுநடக்கிடையாற்றலளாற்பகலு ... ... ... *
மிரவுங்குறிவயினீவரல்வேண்டுமிவள்பொருட்டே... (உ௬௯)

(பகலினுமிரவினுமகலிவணென்றல்.)

தாவாதசெல்வந்தருந்தஞ்சைவாணன்றடஞ்சிம்பா, ... ... *
நீவாரல்சாரனிலவரைராப்பகனீடிருளார்... ... *
மாவானிலவுநிலமங்கைவார்குழன்மல்லிகைபோ ... ... *
லோவாதிரவெறிக்குஞ்சோலைநீழலினூடுவந்தே (உ௭௰)

(உரவோனாடுமூருங்குலனுமரபும்புகழும்வாய்மையுங்கூறல்)

தலத்திற்குமாறைகருமன்னவன்வாணன்றமிழ்த்தஞ்சைசூழ் *
நிலத்திற்குமாமணியாகுநின்னாட்டிற்குநின்பதிக்குங் ... *
குலத்திற்குமாசில்குடிமைக்குஞ் சீர்மைக்குங்கோதின்மெய்ம்
நலத்திற்குமாவதன்றால்வரையாதுநடப்பதுவே (உ௭௧) [வரை

(ஆறுபார்த்துற்றவச்சங்கூறல்.)

புராந்தகர்செஞ்சடைவெண்பிறைபோனுதற்புள்ளிமிழ்பூங்...✻
குராந்தொடைமென்குழற்கொம்பினைவேண்டிக்கொடி முல்லை
நீண்,மராந்தழுவுந்தஞ்சைவாணன்வெற்பாவல்சிதேர்ந்துலஞ்சிக்
கராந்திரிகல்லதர்வாயெல்லிநீவரல்கற்பலவே..........(உாசஉ)

(ஆற்றுத்தன்மையாற்றக்கூறல்)

கலக்குநீர்தெளியுங்கனலெழவூச்செறியுங்கண்ணணீர்... ... ✻
நலங்குற்பொலந்தொடிசோரமெய்சோருமறஞ்செய்கொலை ✻
வலர்கும்படிறுசெய்யாக்குன்றநாடவிளைந்தளிப்பா...... ...✻
யலங்குங்கடும்பரித்தேர்வாணன்மாறையணங்கினையே........()

(காவன்மிகவுரைத்தல்)

நஞ்சாரவந்திரிதருகானடுநாளிரவி... ... ... ... ... ✻
லஞ்சாதுசெங்கையில்விளக்காவணங்கின்பொருட்டான் ... ✻
மஞ்சார்மதிற்றஞ்சைவாணன்வெற்பாவரல்வன்சொலன்னே...✻
துஞ்சார்கடுந்துடிக்கைநகர்காவலர்துஞ்சினுமே.....(உாசச)

(காமமிகவுரைத்தல்)

தென்னனவண்டமிழ்வாணன்றென்மாறைச்செருந்தியுடன் ✻
புன்னைகமுங்கமழ்பூந்துறைவாசூரர்போற்றமிர்தம் ... ✻
பின்னைகமுவந்தபேதைதன்காமப்பெருங்கடற்கு ... ✻
நின்னைகமன்றியுண்போபுணையாதுநீந்துதற்கே ... ...()

(கனவுநலிபுரைத்தல்)

மானுதெவ்வென்றவாணன்றென்மாறைவளநகர்போற்......✻
பூனுகமெல்லியிற்புல்லினையாகவப்பொய்யைமெய்யாப்.....✻
பேணுமகிழ்ந்துபெருந்துயிலேற்றவள்பின்னைநின்னைக்.....✻
காணாள்கலங்கினளாற்கலங்காமனக்காவலனே ... ... (உசகூ)

(கவினழிபுரைத்தல்)

ஏறோற்றகொங்கையிளங்கொடிமாந்தளிரோய்ந்தவண்ணங்.....✻
காரோற்றகங்குலிற்பீரலர்போன்றதுகாவியுண்கண் ... ... ✻
வாரோற்றபைங்கழல்வாணன்றென்மாறையில்வாவியின்கண். ✻
ணீரோற்றசெங்கழுநீர்மலர்போன்றதுநின்பொருட்டே......()

வரைவுகடாதன் முற்றிற்று

(ஒருவழித்தணத்தல் - தன்பதிக்ககற்சிதலைவன்சாற்றல்)

திரைகேகதலைகமணைக்கூடுமெம்பாடியிற்சென்றுவந்தியான் ... ✻
வரைகேள்வருந்துணைவல்லியைநீதஞ்சைவாணன்செவ்வேற் ✻
புரைகேழ்மழைநர்விழிக்கோங்கரும்பேமுலைப்பூசல்வண்டு... ...✻
நிரைகேசவஞ்சிஞ்சேசெல்லன்புகேற்றதன்கடனே (உசஅ)

## ஒருவழித்தணத்தல்.

(பாங்கிவிலக்கல்)

பறந்தாங்கிவர்பரித்தேர்கடவேலுன்பதியடைந்தால் ... ......*
மறந்தாங்கலமையவும்வல்லையன்பாதஞ்சைவாணனென்றோர் ... *
நிறந்தாங்கிவர்கணைபோலுண்கண்மாமுகிலீர்மைகொண்டு ... *
புறந்தாழ்கருங்குழல்வெண்முத்தவாணகைப்பொன்னினையே ()

(தலைவனீங்கல்வேண்டல்)

அறையும்பொறையுமணந்தவெங்கானத்தணங்கையில்வைத்...*
திறையும்பிரிவதற்கெண்ணுகிலேனெண்ணலார்வணமேன் ...*
மறையும்படிவென்றசந்தரவாணன்றென்மாறைவில்வண் ... *
டுறையுங்குழலிசென்றேவரல்வேண்டுமெம்மூரகத்தே...(௨௬௯

(பாங்கிவிடுத்தல்)

இல்லத்துறையுமிவள்பொருட்டானுமக்கியானுமொன்று......*
சொல்லத்தவிர்கிலன்சூழ்கழகழலீர்சுடர்தோய்புரிசை ... ...*
வல்லத்தடர்வென்றவாணன்றென்மாறையில்வந்துவந்து......*
செல்லத்திருவுளம்வைத்தகல்வீர்நுந்திருநகர்க்கே ... ... ()

(பாங்கிதலைவிக்கவன்செலவுணர்த்தல்)

நிலவேய்தரளநிரைத்தன்னவாணகைநீலநிறக்... ... ... *
குலவேய்நிகர்பொற்றொடிநெடுந்தோளிகுறுகிவரச் ... ...*
செலவேகருதினர்செந்தமிழ்வாணன்செழுங்கடலத்... ... *
தலவேதியன்பெறுநாள்பெற்றுவாழ்பவன்றஞ்சையிலே......()

(தலைவிநெஞ்சொடுபுலத்தல்)

குளித்தாரிளங்கொங்கையாவியிலாவிகுளிர்ப்பநம்மை ... ...*
யளித்தாரளித்தகலத்தணைத்தாரன்றணங்கின்முன்னே ... *
தெளித்தார்செழுந்தஞ்சைவாணனென்றோரினஞ்சிந்தைதளைநய *
வொளித்தாரவரிங்ஙனேநன்றுநன்றிவ்வுலகியலே... ... ...()

(சென்றோனீடவிற்காமமிக்கழிபடர்கிளவி)

மயிலாடுதண்டலைமாறைவரோதயன்வாணனென்றோர்க் ... *
கெயிலாகியகடற்கானலஞ்சேர்ப்பற்கிடையிருள்யான் ... ...*
றுயிலாநிலையொன்றுஞ்சொல்லாய்துணையுடன்சூழ்திநாதேன்*
பயிலாமலரணைமேற்றுயிலாநிற்றிபாலன்னமே... ... ... ()

(தலைவியைப்பாங்கியாற்றுவித்தல்)

ஆடுகம்வாநம்மகன்றவரூரகலாப்புதுநீர் ... ... ... ...*
பாடுகம்வாபொற்பசலைதந்தார்திறம்பாங்கினெல்லாந் ... *
தேடுகம்வாதஞ்சைவாணனன்னாட்டன்பர்தேர்வழிநாஞ் ...*
சூடுகம்வாவவாதவர்கானற்றுறைமலரே ... ... ... (௨௭௪

(தலைவன்வந்தமைபாங்கியுணர்த்தல்)

பண்ணுங்குவளையும்பழித்தசொற்பாவைபரியலெல்லா ... ※
மண்ணும்புகழ்தஞ்சைவாணனென்னோனமைக்குவளைக் ... ※
கண்ணுங்கனையிருட்கங்குலுமாரன்கணைகள்பட்ட ... ... ※
புண்ணும்புலரவந்தார்தமதூர்வயிற்போனவரே ... ... ...()

(பாங்கிதலைவனொடுநொந்துவினாதல்.)

ஒருதலைச்செய்தயகல்லதிர்க்குச்செல்லவோருயிர்த்தா ... ...※
யிருதலைப்புள்ளினையைந்தநுங்கேண்மையையெண்ணியெம்மூர்
வருதலைக்கொண்கநினைந்திலைவாணன்றென்மாறைவண்டு ....※
பொருதலைத்தேக்குழலாளழநீகண்டுபோயபின்னே ... ... ()

(தலைவன்பாங்கியொடுநொந்துவினாதல்)

ஐவாயரவுற்றதன்னவின்றுவிடாற்றியென்போ ... ... ※
லெவ்வாறிருந்திர்நீபோவவேளையிற்சோர்ந்தவாமெவன்று ... ...※
மைவாரணங்கொண்டவாணன்றென்மாறைமருவலர்போ......※
லொவ்வாவல்லாயுங்கேட்டிருவீருமொருதனியே ... ... ..()

(தலைவியையாற்றுவித்திருந்தவருமைகூறல்)

இவளாருயிர்புரந்தியானிருந்தேதன்செக்கரிந்துவன்னப் ... ...※
பவளாடவியிற்பயின்றதலம்பங்கயங்குவியத் ... ... ... ...※
தவளாதவஞ்சொரிதண்டுறைவாதஞ்சைவாணன்றெவ்விற் ... ※
றுவளாமலாற்றுவியென்றன்றுநீசொன்னசொன்னினைந்தே ()

ஒருவழித்தணத்தல் முற்றிற்று.

வரைவிடைவைத்துப்பொருள்வயிற்பிரிதல்

என்பொருட்பிரிவுணர்த்தேந்திழைக்கென்றல்

கழைபோல்வளர்நெற்கவின்பெறவாரிகவர்ந்துவரு... ... ...※
மழைபோல்வருகுவன்வன்சுரம்போய்த்தஞ்சைவாணன்வெற்பி
விழைபோலிடையாண்முலைவிலைக்காவனயாவையுங்கொண் ...※
டிழைபோலரிநெடுங்கண்மயிலேசென்றுணர்த்திடுவ ... ()

(நின்பொருட்பிரிவுரைநீயவட்கென்றல்)

வசையும்புகழநின்மேலனவாந்தஞ்சைவாணன்வெற்பா... ...※
மிசையுங்கரும்பினில்வேம்புவைததாலன்ன வேட்கையெல்லாத்
திசையும்பரவுந்திருவனையாடன்றிருவுளத்துக் ... ... ※
இசையும்படிவல்லையேற்சொல்லிநீபின்னெழுந்தருளே (௨௬௧)

(நீடேனென்றவணீங்கல்-)

காலைப்பொழுதுகடும்பரித்தேர்பண்ணிக்கானகம்போ ...※
மாலைப்பொழுவருகுவல்யான்றஞ்சைவாணனன்றாட் ... ...※
பாலைப்பதுமமணிந்தவெற்பூர்நம்மகங்குளிரச். ... ... ※
சோலைப்பசுங்கிளியிலம்பான்மொழிபாவையென்றணிவிதுவே ()

(பாங்கிதலைவிக்கவன்செலவுணர்த்தல்)

வில்லேய்குறும்புமிறம்புமெவ்வாயும் விராயவெவ்வாய்க்...... *
கல்லேய்கவலைக்கடங்கடந்தார்நமர்காய்ந்தெதிர்ந்தார் ....... *
செல்லேய்முரசச்செருவென்றவாணன்றென்மறையினின் *
வல்லேம்முலைவிலைதான்றந்துநாளைமணம்பெறவே ... ... ()

(தலைவியிரங்கல்)

இப்பெருவகையினிப்பிரியேனென்றுமென்முன்சொன்ன *
வப்பேருரைபழுதாமென்னம்வேவரவஞ்சுமந்த... ... ... *
மைப்பேரலைகடல்வையகந்தாங்கியவாணன்றஞ்சைச் ... *
செப்பேரிளங்கொங்கைமங்கைசெப்பாதன்பர்சென்றதுவே ()

(பாங்கிகொடுஞ்சொற்சொல்லல்)

ஆரணத்தானருள்பாரளித்தானடங்காதவனா... ... ...... *
வாரணத்தால்வென்றவாணன்றென்மாறைவயங்கொளிசேர்...*
பூரணத்தார்மதிபோன்முகத்தாயென்புலம்புதிநின்... ... *
காரணத்தாலல்லவோபிரிந்தாரின்றுகாதலரோ... ... (உரு)

(தலைவிகொடுஞ்சொற்சொல்லல்)

மண்டேந்திளைவையைசூழ்தஞ்சைவாணற்குவன்புலியுஞ்... ...*
செண்டுங்கொடுத்தசெல்செம்பியர்போலன்பர்சென்றுழிமுன் *
எண்டிங்களையும்பயிலும்வெங்கானியல்கேட்டுமின்றேய் ...*
கண்டுங்கலங்கல்செல்லாதிந்தவூரற்கழுறனன்றே .. ...(உசு)

(வருகுவர்மீண்டென்பாங்கிவலித்தல்)

தேர்த்தானைவாணன்றென்மாறையில்வேயஞ்சல்செம்புருக்கி.
வார்த்தனையவழிநெடும்பாலைமடப்பெடைநோய்... ... *
பார்த்தாதவந்தண்டாதவதின்மையிற்பைஞ்சிறகாற் ... ...*
போர்த்தாலுமஞ்சைகண்டும்போவரோநம்புரவலரோ... ... *

(பருவங்கண்டுபெருமகள்புலம்பல்.)

மிகவும்பரந்தகரியகண்ணீர்செங்கைவெள்வளைபோ... ... *
லுகவுந்துறந்தவருன்னலராலுறைகார்பொழிய ... ... ...*
மகவுந்துணையுங்கலைதழுவுந்தஞ்சைவாணன்வெற்பி... ... *
னகவும்பெடைமயிலுந்தமியேனெனநகைக்கிலவே ... ...()

(இகுளைவம்பென்றல்.)

தனஞ்சேர்ந்தவஞ்சிநின்சாயல்கண்டஞ்சித் தனித்தனிபோய் *
வனஞ்சேர்ந்தயர்ந்தமயில்களெல்லாந் தஞ்சைவாணன்வெற்பிற் *
கனஞ்சேர்ந்தலர்துளியாலுமின்னேவப்புகாலுமென்றே...... *
வினஞ்சேர்ந்தகவினராந்தனிவாடியிருத்தல்கண்டே... (உசுக)

(இறைமகண்மறுத்தல்.)

வாவித்தகையன்னமேதஞ்சைவாணன்வரையகத்தெய் ... ... *
பாவித்தனிநெஞ்சுபார்த்தஞ்சுமேகண்பயின்றகண்ணார் ...... *
தூவித்தளைமயில்கோபங்கொள்ளாவரத்தோன்றிலயச்சேர்ந் *
தாவித்தகந்தளரும்மணிகாலுமராவென்னவே... ... ... ()

(அவர்தூதாகிவந்ததடைந்ததிப்பொழுதெனத்துணைவிசாற்றல்)

இன்னேவருவர்நின்காதலரோதிலரோங்கவினிக்... ... ... *
கொன்னேயிரங்கிவருந்தல்கண்டாகொற்றநேமிவிந்தை ... *
மன்னேயெனவந்தவாணன்றென்மாறைவரவுணர்த்த ... ... *
முன்னேநடந்தனகாண்கடுங்காலமுகிலினமே... ... ... ()

(தலைமகளாற்றல்)

இன்புற்றகாலத்திருவர்க்குமொன்றுயிரொன்றுசொன்ற ... ... *
ரன்புற்றகாதலராதலினலகன்றுபோனநாந்... ... ... ... *
துன்புற்றகாலத்தவருழுருரல்லர்தோழிசொல்லும்... ... *
வன்புற்றகாரளிக்குந்தஞ்சைவாணன்றென்மாறையிலே (உஎஉ)

(அவளைவுட்புலம்பல்)

விழிகுழியும்படிதேர்வழிபார்த்தளைவீழ்ந்துவண்டு... ... *
கொழுதிமிருங்குழல்சோரக்கிடந்துகுடங்கையின்மே... ... *
லொழுகியவஞ்சனவெள்ளத்துணங்குமணங்கைமுன்சென் ... *
றெழுகெனுநெஞ்சமென்னேயவரோயெனிலென்சொல்லுமே(

(இதுபிறசெய்யுட்கணு-பாகனொடுசொல்லல்.)

வன்மாமுடுகவலவதிண்டேரினிவாணன்றஞ்சைக் ... ... *
கென்மாலுறுநெஞ்சினமுன்செலநாகிளவேறுபுல்லிப்... ... *
பொன்மாமணியும்பிரிந்திருந்தாரும்புலம்புமன்றிற்... ... *
சென்மாலையந்திகண்டாற்றரியாளென்றிருந்திலழையே... (உஎச)

(மேகத்தொடுசொல்லல்.)

வேண்டும்பொருளைத்தரும்பொருட்போய்முற்றி மீண்டவென்
றூண்டும்பரிமுன்றுனைமுகில்காள்சென்றுசொல்லுமிந்து [தேர்
தீண்டுங்கொடிமதில்சூழ்தஞ்சைவாணனைச்சேரலர்போ ... *
லீண்டும்பசலைமெய்போற்றிருப்பார்தமக்கென்வரவே ... ... ()

(பாங்கிவலரும்புரிகேட்டவன்வரவறிவுறுத்தல்)

பொருகின்றசெங்கயல்போல்விழியாய்ப்பண்டுபோய நின்கைக்
குருகின்றணிந்திறைகொள்வதுகாண்கநங்கொண்கர்பொற்றேர் *
தருகின்றசங்குந்தருவன்னவாணன் தமிழ்த்தஞ்சைவாய்... ... *
வருகின்றதென்றுமுனைமேனபோலைகூறும்வலம்புரியே (உஎசு)

(வலம்புரிகிழத்திவாழ்த்தல்.)
மால்வண்டெனமன்னிவாணன்றென்மாறைமன்னன்புகழே... ✽
போல்வண்டமிழ்மன்னர்போற்றவிளங்குகபொன்கொழிக்கும் ✽
கால்வண்டல்வையைக்கரைமல்குமல்லிகைக்கான்முலைகயின் ... ✽
மேல்வண்டிருந்ததுபோற்கருமாமுகவெண்சங்கமே ... (உஎஎ)
(தலைவன்வந்துழிப்பாங்கிநினைத்தமைவினவல்)
நினையார்பொருட்குப்பிரிந்தயலூட்டுழிநின்றுழிவே ... ... ✽
ளினையார்நினைந்துமரிதிர்கொல்லோவஞ்சொலாலரிவோர்... ... ✽
வினையரிதழ்க்கண்ணிவாணன்றென்மாறையைவாழ்த்தலர்போ ✽
னினையரிதழ்க்கண்வைகாவெவ்வநோயுற்றரவ்வியையே ... ()
(தலைவனினைத்தமைசெப்பல்)
காநெடுங்குன்றங்கடந்துசென்றேனொருகாலுமைதோய் ... ✽
மாநெடுங்கண்ணிமறந்தறியேன்வரைவாணன்றஞ்சை ... ✽
தீநெடும்பெண்ணைக்குரும்பையுஞ்சூதுநெருங்குகொங்கைத் ✽
தேநெடுங்கண்ணிமென்பூங்குழன்மாதர்திருமுகமே... (உஎக)
(பாங்கிதலைவியையாற்றிவித்தித்தலைமகன்கூறல்)
உயராமல்கத்தருங்கனிநீர்நகைக்குண்சுரம்போய்... ... ... ✽
வியராமலில்லினடுக்கன்றுளைமென்பூஞ்சிலம்பா ... ... ✽
வயராமலஞ்சலென்றூற்றுவிதமேதனிவ்வவனியெல்லா ... ... ✽
மயராமல்வந்தபிரான்றஞ்சைவாணன்றென்மாறையிலே... ()
வரைவிடைவைத்துப்பொருள்வயிற்பிரிதன்முற்றிற்று.
(வரைவுமலிவு)
(காதலன்முலைவிடுத்தமைபாங்கிகாதலிக்குணர்த்தல்)
தொலைவிலையாகியபல்பொருள்காதலர்சூதமர்நின் ... ... ✽
முலைவிலையாகமுகந்தளித்தார்முனைவேந்தர்தம்மைத்... ... ✽
தலைவிலையாகத்திறைகொண்டவாணன்றமிழ்த்தஞ்சைநீ ... ✽
புலைவிலையாகுகபொன்வண்ணமாறுகவொண்ணுதலே... ... ()
(காதலிநற்றாயுள்ளமகிழ்ச்சியுள்ளல்)
கயமாமலரொணுங்கண்ணியைவண்டெனுங்காளைபல்புள் ... ✽
ளியமாமணம்புணரீர்ந்துறைநாடனெதிர்ந்தவர்மேல் ... ... ✽
வயமாநடத்தியவாணன்றென்மாறைவருகுவனோ ... ... ✽
னயமாமணவணிகண்டியாயுமின்புறுநம்மினுமே... ... ()
(பாங்கிதமர்வரைவெதிர்ந்தமைதலைவிக்குணர்த்தல்)
மணிப்பாலிகைமுதலம்பலவத்தாங்கடம்பலர்வார்திரைதூ ... ✽
யணிப்பாய்துவலையரும்புந்துறைவர்க்கணியெதிர்ந்து... ... ✽
பணிப்பாசிலைழயல்குல்வெண்ணகையாய்நமர்பாரதின்றேனே ✽
தணிப்பான்முரசறைந்தார்தஞ்சைவாணன்றமிழ்நிலத்தே ... ()

(தலைமகளுவகையாற்றுளத்தொடுகிளத்தல்.)

சோகாகுலமெய்தல்காண்டுநெஞ்சேநந்துறைவனொனு … …※
நீகானுடன்பள்ளிநீள்வங்கமேறிநிலம்புக்கு… … … ※
மாகாவிரியன்னவாணன்றென்மாறைமன்னன்பகையு… …※
மேகாவிருட்கங்குலாங்கடற்கானலெனுங்கலமேய … … ()

(தலைவனைப்பாங்கிவாழ்த்தல்)

மாரியஞ்சுங்கொடைவாணன்றென்மாறையில்வாழிவண்டார்…※
வேரியந்தொங்கல்விளாகமழ்மார்பவிடாதவம்பற்… … …※
சேரியம்பொய்கைத்துறையலர்வாடநுஞ்செவ்விமணந் … ※
தூரியஞ்சங்கதிரக்காட்டுநீயன்றுசூட்டலமோ… … … ()

(தலைவிமணம்பொருட்டாகவணங்கைப்பாநிலைகாட்டல்.)

உரவிப்பெருங்கலித்துன்பங்கள்போய்முதலூழியின்பம் … ※
வரவிப்படிதானேவாழ்வித்தவாணன்றென்மாறையன்னாள் …※
புரவிப்புனைநெடுந்தேரன்னைமேலதின்பொருட்டணங்கைப் …※
பரவிப்பரவிநின்றேவரம்வேண்டுதல்பார்த்தருளே… … ()

(பராநிலைகண்டதலைமகன்மகிழ்தல்)

இவ்வத்தகமிவட்செய்தியதெவ்வணமெவ்வுலகும்… … …※
வவ்வித்திகழ்புகழ்வாணன்றென்மாறைமணம்பொருட்டா …※
னவ்வித்தொகையினநானுமென்னெஞ்சுநறைபுகையாக்… ※
செவ்வித்தகமலர்தூய்த்தெய்வம்வாழ்த்துந்திருத்தகவே …()

வரைவுமலிவு முற்றிற்று.

(அறத்தொடுநிற்றல்-கையறுதோழிகண்ணீர்துடைத்தல்.)

அயிராத்துணைவந்துவண்டதம்பாவையழித்தனவோ… … ※
செயிராதவுன்னைசெயிர்த்தனரோசெறிநாரையின்போர் …※
வயிராநரலும்வயற்றஞ்சைவாணன்றென்மாறையிலன் … ※
னுயிராகியதைடனிகலுழ்வானென்னுளங்குழைந்தே … …()

(தலைமகள்கலுழ்தற்காரணங்கூறல்)

தாரணிகொண்டவிருதோளொருவர்தனித்துழியென் … …※
வாரணிகொங்கைமணந்துசென்றார்தஞ்சைவாணனன்னார்…※
தேரணிவென்றசெழும்புகர்வேல்விழித்தனிஞ்சூழ் … …※
காரணிமென்குழலாயதுவேயழுங்காரணமே … … (உஅக)

(தலைவன்றெய்வங்காட்டித்தெளிப்பத்தெளிந்தமைகூறல்.)

துதித்தேனணங்கொடுசூளுமுற்றேனென்றசொல்லைமெய்யா.※
மதித்தேனயர்ந்துமதிப்பிலியேன்றஞ்சைவாணன்வையை… ※
நதிக்கேதனிநம்புன்னைமாதர்கண்போலநகைக்குநெய்தற் … ※
பொதிக்கேநின்றுகர்ந்தகலுங்கழிக்கானற்புலம்பர்வந்தே…(உகய)

(இறைவிதலைவனிகந் தமையியம்பல்.)

வரிபோலவண்டலைதண்டலைசூழ்தஞ்சைவாணன்வண்மைக் ... ✻
குரியோனுயர்வையையொண்டுறைவாயுரவோர்தெளிந்துங் ... ✻
கரியோர்பிறரில்லையென்றசன்றரிணிக்காரிகையாய் ... ... ✻
பெரியோர்மொழிபிறழார்பொன்றுந்தேறுதல்பேதைமையே ... ()

(பாங்கியியற்பழித்தல்)

மழவேதுறந்துமறந்தவர்போற்றஞ்சைவாணன்வெற்றி ... ... ✻
முழவேயமுந்நீர்முழங்கிருங்கானமுமுழுதுலகுந் ... ... ... ✻
தொழவேதருந்தெய்வநோக்கிச்செல்வேனென்றுசொல்லியுநீ ✻
யழவேதுறந்தனரானல்லர் நல்லரவ்வாடவரோ ... ... (௨௱௬௨)

(தலைமகளியற்பட மொழிதல்)

மாகப்புயன்மன்னணில்வந்தனவாணன்றென்மாறைமுந்நீர் ... ... ✻
நாகப்புரச்செய்யபுள்ளிக்கபஞ்சாய் ஞெண்டுநாகினந்தன் ... ✻
பூகக்குளிர்நிழற்பேடையொடாடும்புலம்பரின்று ... ... ... ✻
ராகக்கருதினல்லாயினியாரினியாருளரோ ... ... ... ... (௨௱௬௩)

(தெய்வம்பொறைகொளச்செல்குவமென்றல்)

மாதங்கநல்குந்தைவாணன்றென்மாறைவையைத்துறைவ ... ✻
ரேதம்பயந்திலரெங்கட்குநீயெம்பிகந்ததனுற் ... ... ... ... ✻
கோதம்படாதிகொடுந்தெய்வமேயென்னுகூர்பலிதூய்ப் ... ... ✻
பாதம்பரவநல்லாயிருவேமும்படர்குவமே... ... ... (௨௱௬௪)

(இல்வயிற்செறித் தமையியம்பல்)

தன்போலுலகம்புரக்கின்றவாணன்றமிழ்த்தஞ்சையார் ... ... ✻
மன்போலெவர்க்கும்வழங்கி யுண்ணுதவர்வைத்திழைக்கும் ... ✻
பொன்போலிறுகப்பொதிந்து கொண்டாளன்னைபூவையெம் மே
வன்போதியமடவாலர்தூற்றியவாறுகண்டே...... (௨௱௬௫) [ல்

(செவிலிகனையிருள்வன் வரக்கண்டமைகூறல்)

வெங்காருகவெம்புருவமின்னேயன்னைமேலொருநா ... ... ✻
ளெங்காதலரிருளெய்தல்கண்டாளிந்தவேழுலகு ... ... ... ✻
மங்காமல்வந்தருள்வாணன்றென்மாறைவண்டானமஞ்சச் ... ✻
சங்காழிகொண்டெறியுங்கண்டல்வேலியந்தண்டுறைக்கே... ... ()

(எறிவளைவேற்றுமைக்கேதுவினுவல்)

பொன்னூற்றகொங்கையு முத்தூற்றகண்ணுமிப்போதுகண்டே
பன்னூற்றசொல்லுமின்பாலுக்கொள்ளான்பதினுலகு ... [ன்
மன்னூற்றவண்புகழ்வாணன்றென்மாறையென்னன்னையாட் ✻
கென்னூற்றதென்றறியேன்புனங்காவலிருந்தபின்னே (௨௱௬௭)

(பாங்கிவெறிவிலக்கல்)

அறியாமையின்றென் றுகேட்கலுற்றேனும்மையாவதொன் றுங் *
குறியாமறியுயிர்கொள்ளவென் றேகுருதிப்பலிகூர் ... ... *
வெறியாலிவளுயிர்மீட்சவென் றேவென்றிவேல்வலத்தீர் ... ...*
சிறியார்மனையில்வந்திதஞ்சைவாணன் சிலம்பினின்றே (உ௱கஅ)

(வெறிவிலக்கியவழிசெவிலிபாங்கியைவினாதல்)

மண்குன்றவந்தாலியினைமாற்றியமாணன்றஞ்சை ... ... *
யொண்குன்றமங்கையர்முன்னர்பின்னேயுமையாண்மகனைப் *
பண்குன்றவென்றசொல்வள்ளிதன்கோனைப்பைந்தாரயிலால் *
வெண்குன்றெறிந்தசெவ்வேளையிவ்வாறென்விளம்பியதே ... ()

(பூத்தருபுணர்ச்சியாலறத்தொடுநிற்றல்)

போருறைதீச்சணைபோலுநின்கண்டுபோதவஞ்சி ... ... *
நீருறைநீலமுநீயுநண்பாசென் றுநின்மாட்சோர் ... ... *
தாருறைதோளவர்தந்தனர்வாணன்றமிழ்த்தஞ்சைசூழ் ... ...*
காருறைசோலையில்யாம்விளையாடியகாலையிலே ... ... (ரு௱)

(புனறருபுணர்ச்சியாலறத்தொடுநிற்றல்)

ஒளிதோற்றியசொல்லுன்மகளோதிக்குடைந்தகொண்டல் ...*
பொழிதோற்றிரளுந்திவந்தசெந்நீருந்திப்பொற்பினுக்கோர்...*
சுழிதோற்றிடும்பகைதீர்க்கின்றபோதொருதோன்றலுமவ் ... *
வழிதோற்றிவந்தெடுத்தான்றஞ்சைவாணன்றென்வையையிலே

(களிறுதருபுணர்ச்சியாலறத்தொடுநிற்றல்)

மண்ணலையமல்வளர்க்கின்றவாணன்றென்மாறைவெற்பி......*
லண்ணலையாயிழைபாகனென்றஞ்சினமஞ்சனந்தோய் ... ...*
கண்ணலைநீரிடப்பாகமுமேல்வந்தகைக்களிற்றின் ... ... *
புண்ணலைநீர்வலப்பாகமுந்தோயப்பொருதவன்றே ... (ரு௱உ

(தலைமகள்வேற்றுமைகண்டுநற்றாய்செவிலியைவினாதல்)

தண்டார்தழுவியவேலண்ணல்வாணன்றென்றஞ்சைவெற்பில் *
வண்டார்குழலிதன்வண்ணமுங்கணனும்வடிவுமுன்னட் ... *
கண்டாரறியும்படியனவ்வயல்லக்காரணமொன் ... ... *
றுண்டாலுயிரனையாயயிராமலுரையெனக்கே ... ... (ரு௱ரு)

(செவிலிநற்றாய்க்குமுன்னிலைமொழியாலறத்தொடுநிற்றல்)

மலைவந்ததோவெனும்வாரணவாணன்றென்மாறைமதிச் ... ...*
சிலைவந்தமந்தவெனுநன்னுதலாயொருசெல்வரிங்கோர் ... ...*
கலைவந்தமந்தவனவந்துவினாவிதங்காரிகைக்கு... ... ... *
முலைவந்தமந்தவில்லையோவென்னுநாளின்முயங்கினரோ (ரு௱ச)

அறத்தொடுநிற்றன்முற்றிற்று.

(பாங்கி தலைவற்குடன்போக்குணர்த்தல்)

மைந்நீர்நெடுங்கண்மடந்தையுடன்றஞ்சைவாணன்வெற்பா ... *
செந்நீர்விழவணிநின்னகர்க்கேகொண்டுசேர்ந்தருண்மற் ... *
றிந்நீர்மையல்லதொராறுமின்றாலிக்கெம்மையனொன்றன் ... ... *
முந்நீருலகுங்கொள்ளார்விலையாகமுலையினுக்கே ... (௩௱௫)

(தலைவனுடன்போக்குமறுத்தல்)

பாரோமுலைவிலையென்பர்நின்கேளிரொன்பல்கிளைவா ... ... *
ரூரோவணியதன்றெண்டொடிசாய்விந்தையுண்கண்களோ ... *
தாரோவளரும்புயன்றஞ்சைவாணன்றரியலர்போல் ... ... *
யாரோதனிநடப்பாரருங்கானமிவளுடனே ... ... (௩௱௬)

(பாங்கி தலைவனையுடன்படுத்தல்)

சுருளேய்குழலுஞ்சுணங்கேமுலையுஞ்சுமந்துகற்புப் ... ... *
பொருளேயெனச்சுரம்போதுமப்போதுபுகழ்வெயிலான் ... *
மருளேய்கலியிருண்மாற்றியவாணன்றென்மாறையினின் ... ... *
னருளேயொழியவுண்டோநிழலாவதணங்கினுக்கே ... ... (௩௱௭)

(தலைவன்போக்குடன்படுதல்)

நஞ்சோவழலோவெனுஞ்சுரமோசெல்லநாடியவென் ... ... *
னெஞ்சோகொடியதுநேரிழையாய்நிழன்மாமதியோ ... *
மஞ்சே தவம்மதில்சூழ்தஞ்சைவாணன்வரையிலவம் ... ... *
பஞ்சோவனிச்சங்கொலோவெனுஞ்சீறடிப்பைந்தொடிக்கே ... ()

(பாங்கி தலைவிக்குடன்போக்குணர்த்தல்)

பாலன்னபாயற்பகையெனுஞ்சீறடிபட்டுருவும் ... ... ... *
வேலன்னகூர்ங்கன்மிதிக்குங்கொலென்றனர்மேதினிக்கு ... *
மாலன்னவாணன்றென்மாறைநன்னாட்டுவயலுகளுஞ் ... ... *
சேலன்னநீள்விழியாய்தெரியாதன்பர்சிந்தனையே ... ... *

(தலைவிநாணழிவிரங்கல்)

மறவாகைவேலங்கைவாணனைமாறையர்மன்னனைத்தம் ... *
முறவாகமதண்ணளியுறுதவர்போலுயிரோம்பியென்றும் ... ... *
துறவாதநாணந்துறப்பதுவெண்டவிற்றொல்லுலகிற் ... *
பிறவாதொழிகைநன்றேயொருகாலமும்பண்பிறப்பே ()

(கற்பின்மேம்பாடுபாங்கிகூறல்)

செந்நாண்மலரிற்றிருவன்னகோலத்தெரிவையர்க்கு ... *
மெய்ந்நாணுயிரினுமிக்கதென்றால்விரவாவரசர் ... *
தந்நாண்முறைநலமதவிர்த்தருள்வாணன்றமிழ்த்தஞ்சைநாட் ... *
டந்நாண்மடவாய்கற்புநோக்கவழகிதன்றே ... ()

(தலைவியொருப்பட்டெழுதல்)

பலரோசுமந்தவுனைகளுந்தாயர்தம்பார்வைகளுந் ... *
சிலரோசுமந்துதிரியவல்லார்செய்யசெண்பகநாண்... ... *
மலரோசுமந்தவயற்றஞ்சைவாணனைவாழ்த்தலர்போ ... *
லலரோசுமந்துசுமந்திந்தவூர்நின்றழுங்குகவே ... ...()

(பாங்கிசுரத்தியல்புரைத்துழித்தலைமகள்சொல்லல்)

செல்லிற்கொடியகளிற்றண்ணல்வாணன்றென்மாறைமன்னன் *
வில்லிற்கொடியபுருவமின்னேயென்விளம்புதிநீ ... *
சொல்லிற்கொடியநம்மன்னையைப்போல்பவருந்திருக்கு ...*
மில்லிற்கொடியதொல்லோசெல்லுநாட்டவ்விருஞ்சுரமே ... *

(பாங்கிகையடைகொடுத்தல்)

பறந்திருந்தும்பர்பதைப்பப்படரும்புரங்கரப்பச் ... *
சிறந்தெதிரடிதென்றில்லையன்றூடிறத்துச்சிலம்பா ... *
வறந்திருந்துன்னருளும்பிறிதாயினருமறையின் ... *
திறந்திரிந்தார்கலியும்முற்றும்வற்றுமிச்சேணிலத்தே ()

(இதுபிறசெய்யுட்கவி-பாங்கிவைகிருள்விடுத்தல்)

பொழிநானமன்றலம்பூங்குழனீங்கள்புணர்ந்துசெல்லும் ... *
வழிநாடிநும்பின்வருகுவல்யான்றஞ்சைவாணன்வையைச் ... *
சுழிநாணுமுந்திநின்றோழிக்கேற்பனசொல்லியின்று *
மொழிநாவடங்கமொழிந்தபலாமுகங்கவிழ்த்தே ... ()

(தலைமகளைத்தலைமகன்சுரத்துய்த்தல்)

தளிபோற்கொடைபயில்சந்திரவாணன்றமிழ்த்தஞ்சையா ... *
னளிபோற்குளிர்ந்தவிளமரக்காவுமவன்புகழ் ... *
றெளிபோல்விளங்கியவெண்மணல்யாறுமுவந்துகண்டு ... *
நளிபோதவிழ்குழலாய்மெல்லமெல்லநடந்தருளே ... ()

(தலைமகன்தலைமகளசைவறிந்திருத்தல்)

வரமானமைவேற்படைவாணன்றென்மாறைவணங்கலர்கள் ... *
புரமானவல்லழல்பொங்குவெங்கானிற்பொருந்தியகூ ... *
ரரமானகல்லுன்னடிமலராற்றலவாதலினுஞ் ... ...*
சுரமாறுமெல்லைநல்லாயிருப்பாமிந்தச்சோலையிலே ... ()

(உவந்தலர்சூட்டியுண்மகிழ்ந்துரைத்தல்)

அடிமலர்போற்றவும்போற்றியன்பாலிவளாய்முடிக்கியான் ... *
கடிமலர்சூட்டவுங்காட்டியதாற்கள்வர்காய்ந்தெதிருந் ... ...*
துடிமலர்சீர்க்கெதிர்கூகையிரட்டுஞ்சுரத்திடையோர் ... *
வடிமலர்வேற்படையான்வாணன்மாறைப்பெண்மாதவமே... ()

(கண்டோர்யிர்த்தல்)

கையத்திரள்புயன்சந்திரவாணன்றனிபுரக்கும் ... ... ...※
வையத்துறைகின்றமானிடரோவன்றிவானவரோ ... ... ※
நையப்படுமழல்வெஞ்சுரத்தூடுநடந்தவரென் ... ... ...※
றையப்படுவதல்லாலுண்மைசாலவறிவரிதே ... ... (௫௱௰௧)

(கண்டோர்காதலின்விலக்கல்)

மானுந்திருவுமெனவருவீர்தஞ்சைவாணன்றெவ்வூர் ... ... ※
போலுஞ்சுரமினிப்போகவொண்ணாதுபொருப்படைந்தா ...※
ஞாலும்புரவியருக்கனிக்கங்குலடற்கடமான் ... ... ... ※
பாலுந்தலைசயுமுண்டேதங்குவீரெங்கள்பாடியிலே ... (௫௱௨௰)

(கண்டோர்தம்பதியணிமைசாற்றல்)

தொடங்கும்பிறைநுதற்றேரையுநீரிமுன்சென்றுயின்ற......※
கடக்குன்றிரண்டுங்கடந்துசென்றற்கமலத்தடமுங் ... ...※
கிடங்கும்புரிசையுஞ்சூழ்ந்தெதிர்தோன்றுங்கிளைத்தடைந்தார்த் ※
தடங்குங்குமநெடுந்தோள்வாணன்மாறையுந்தஞ்சையுமே (௫௱௨௰௧)

(தலைவன்றம்பதியடைந்தமைதலைவிக்குணர்த்தல்)

சந்தனந்தோய்ந்துதயங்குமுத்தாரந்தரித்துவிம்மு ... ... ※
நந்தனந்தாங்கிநடுங்கிடைபோலநடந்திங்கனே ... ... ...※
நொந்தனங்காலென்றுநோவல் பொன்னேயொருநோயுமின்றி ※
வந்தனங்காணிதுகாணன்மாறைவளநகரே ... ... (௫௱௨௰௨)

(உடன்போக்குமுற்றிற்று) (கற்பொடுபுணர்ந்தகவ்வை)

(செவிலிபாங்கியை வினாதல்)

நலம்புனையாயமுநீரிநற்றாயொடுநானுநற்பொற் ... ... ※
சிலம்புயர்சோலையுஞ்சிற்றிலும்பேரிலுந்தெண்டிரைமேல் ...※
வலம்புரிபூர்வயல்சூழ்தஞ்சைவாணனைவாழ்த்தலர்போற் ... ※
புலம்புறமாதரெங்கேமகளேதனிப்போயினளே ... (௫௱௨௰௩)

(பாங்கிசெவிலிக்குணர்த்தல்)

வெறுத்தாரொறுத்துலாமேலுநங்கேளிர்விழைதலின்றி........※
மறுத்தாரவற்குமணமதனாற்றஞ்சைவாணர்பிரான் ... ... ※
கறுத்தார்புரத்துநடந்தனள்காளைபின்யாமர்கற்பாற்... ... ...※
பொறுத்தாளழற்சுரந்தன்னையன்றாய்நின்பொலங்கொடியே...()

(செவிலிதேற்றுவோர்க்கெதிரழிந்துமொழிதல்)

மாறுவளவயல்சூழ்தஞ்சைவாணன்றென்மாறையெய்க... ...※
ஞாறுவ்வருந்துயராற்றுகின்றீரறிவேன்கொளுத்து ... ... ... ※
பூறுவனகடிந்தென்முலைபூறமிர்தூட்டியிஃசொற் ... ... ※
கூறுவளர்த்ததற்கோவென்னைநீத்ததென்கோல்வளையே (௫௱௨௰௫)

(செவிலிதன்னறிவின்மைதன்னைநொந்துரைத்தல்)

வழியாவரும்பெருநீர்த்தஞ்சைவாணனைவாழ்த்தலர்போற்......※
கழியாதவன்புடைக்காளைபின்றளைக்கலந்துகொண்டல்.........※
பொழிபாதவெஞ்சுரம்போகுவல்யானென்றுபோங்குறிப்பா...※
லொழியாதென்முன்புசொன்னாள் பேதையேனுன்னறையோர்ந்

(செவிலிதெய்வம்வாழ்த்தல்) [திலனே

இணங்கிப்புவனத்தெவருமில்லாவென்னிளங்கொடியா.........※
ளுணங்கிக்கழிதலொழியவெம்பால்வரவுன்னையன்பால்.........※
வணங்கிப்பலமுறைவாழ்த்துகின்றேன்றஞ்சைவாணன்றெவ்வை
யணங்கித்திரள்புயத்தான்மலயாசலத்தாரணங்கே... ... (ரூஉஎ)

(செவிலிநற்றாய்க்கறத்தொடுநிற்றல்)

சகநல்கவந்தருள்சந்திரவாணன்றென்றஞ்சைநல்லாய் ... ...※
முகநல்கிநல்கமுலைகொடுத்தாரின்முத்தங்கொடுத்தார் ... ※
மிகநல்லவொன்பதுமன்பதைதந்திறவிடலைபின்னே ... ... ※
மகநல்குமந்தியங்கானடந்தாளுன்மடந்தையின்றே... ...(ரூஉஅ

(நற்றாய்பாங்கியதன்னொடுபுலம்பல்.)

முன்னையிதன்னமொழிந்தன்னையேனுந்தைமுந்தைமணம்......※
பின்னைக்குழலிபெருளல்லளேபிறராதெவர்க்குந் ... ...※
தன்னையம்வைத்தருளுந்தஞ்சைவாணன்றமிழ்ச்சிலம்பிற் ... ※
பொன்னையனையநல்லாயவமேசுரம்போக்கினையே...... (ரூஉக)

(அறநோட்டபாங்கிபழங்கல்கண்டுநற்றாய்புலம்பல்)

இல்லும்பூங்காடிடங்களுநோக்கியிரக்கல்வரும் ... ... ...※
வல்லும்பொருங்கொங்கைமங்கைநல்லாய் தஞ்சைவாணனென்று
புல்லுந்துணைவிபர்போல்வினையேன்பெற்றபூவையன்னாள் ...[ர்
செல்லுஞ்சுரத்தழலன்றுன்கண்ணீர்பெற்றெழுங்கின்றதே(ரூரூய)

(நற்றாய்பாங்கியர்தம்மொடுபுலம்பல்)

நேயம்புணைதுணையாகவெங்கானகநீந்தலெண்ணி... ... ...※
யாயம்புலம்பவகன்றனளோகல்லகங்குலைழய ... ... ... ※
மாயம்புகலொருகாளைபின்வாணன்றென்மாறையன்னீர்... ...※
சேயம்புயமலர்போலடிநோவவென்சில்வளையே ... ... (ரூரூக)

(நற்றாயயலார்தம்மொடுபுலம்பல்)

மேனாள்வரக்கிடந்தென்போல்வருந்திமிகவுமெய்ந்நோந்... ...※
தீனாகிவர்துன்டீமெய்துவரோவிமையோருலகந் ... ... ...※
தானாணநீடுமதிற்றஞ்சைவாணன்றமிழ்ச்சிலம்பின் ... ... ※
மானேர்விழிபனையாள்விளையாடியவண்டல்கண்டே... ...(ரூரூஉ)

(நற்றாய்தலைமகள்பயிலிடந்தம்மொடுபுலம்பல்)

செயலைத்தருவின்றிருநிழலேபெருஞ்சிற்றில்லமே... ... ... *
வயலைக்கொடிநொச்சிமண்டபமேதஞ்சவாணனொன்னா ... ...*
ரியலைத்தனித்தனிதந்தனளே நமர்கின்றிதஃறே ... ... *
கயலைப்பொருதகண்ணாண்மேலும்வாழ்விக்குங்கட்டளையே... ()

(நிமித்தப்போற்றல்)

வடியேய்புகர்முகவாள்வல்லவாணன்றென்மாறையுள்யா ... ... *
னடியேதொழுந்தெய்வமாகநிற்பேணியரும்பலியிப்... ... ...*
படியேதருகுவலென்றாயினேனிப்பதியுவகைக் ... ... *
கொடியேவரக்கலாநீகொடியேன்பெற்றகொம்பினையே (௱௱௪)

(சுரந்தணிவித்தல்)

வெஞ்சுரநாடுவியன்சுரலோகமும்வெங்கடுங்கா... ... ... *
னஞ்சுரதாருவனங்களுமாகவகிற்புகைபோன்... .. ... ...*
மஞ்சுரவாடகமாமதில்சூழ்தஞ்சைவாணன்வெற்பிற்... ......*
பஞ்சுரமாருமொழிச்சுரமேகியென்பைந்தொடிக்கே... ... ()

(தன்மகண்மென்மைத்தன்மைக்கிரங்கல்)

தாமேதமக்கொப்புமற்றில்லவர்தில்லைத்தண்ணளிச்சப்... ...*
பூமேன்மிதிக்கிற்பதைத்தடிபொக்குளங்காயெரியுந்... ... *
தீமேலயில்போற்சுடுபரற்கானிற்சிலம்படிப்பா... ... ......*
யாமேநடக்கவருவினையேன்பெற்றவம்மனைக்கே... ... ...()

(இதுபிறசெய்யுட்கவி.)

(இளமைத்தன்மைக்குளமெலிந்திரங்கல்.)

இரும்பாடனங்கொண்டவாறென்னைநிதன்மையேய்ந்தியென்றும் *
வரும்பாவலர்க்கருள்வாணன்றென்மாறைநவளவடற்ப ... ... *
கரும்பார்மொழியாயபூலென்றுகண்ணீர்துடைத்தலைத்துன் *
னரும்பாமுலைசெய்யவாய்ப்பசும்பாலைவக்கிளிக்குப்பின்னை... ()

(அச்சத்தன்மைக்கச்சமுற்றிரங்கல்.)

நாண்மாதவிமலர்நாறுங்கூந்தனடந்தவழிக்... ... ... ...*
கோண்மாகுமிழுங்கொடுங்குரல்கேட்டொறுங்கூர்ங்கணையால் *
வாண்மாமுனைவெனறவாணன்றென்மாறைமன்னவனைவெய்த் *
தோண்மாவெருவுங்கொல்லோவென்றெனுருயிர்சோர்கின்றதே

(கண்டோரிரக்கம்)

நொந்துங்கலுழ்ந்துந்துனை வியராற்றலர்நோக்கொடின்சொற் *
றந்துங்கலையுந்தணந்துசென்றாளெனத்தாள்பணியார் ...*
மைந்துங்கதமுங்கடிந்தருள்வாணன்றென்மாறையன்னாள் *
பந்துங்கழங்குமெல்லாங்கண்டுவாடும்பயந்தவளே ... ... .......()

(செவிலியாற்றுத்தாயைத்தேற்றல்.)

நன்றேயிதென்றுமுகமுகநோக்கிநகைநகையா ... ※
மன்றேயலர்சொல்லுமாதர்முன்னேதஞ்சைவாணன்றொல்சீர் ※
சென்றேபரந்ததிசைகளெல்லாஞ்சென்றுதேர்ந்தணங்கை ... ※
யின்றேதருவனன்னேவருந்தாதிங்கிருந்தருளே ... (ஙாசய)

(ஆற்றிடைமுக்கோற்பகவனைவினாதல்.)

ஒருவெண்குடையிருநீழன்முக்கோல்கொண்டொழுக்கத்தினை ※
லருவெங்களரியைந்தாறுசெல்வீரருளீரொழுபார் ... ※
மருவேண்டிசைபுகழ்வாணன்றென்மாறையென்வஞ்சியன்னாள்
பொருவெஞ்சுடரிலைவேலொருகாளைபின்போயினளே ... ...()

(மிக்கோரேதுகாட்டல்.)

இயங்காவனமென்மகளொருகாளைபின்னேகினளென் ... ※
றுயங்காதொழியஞ்சலவியல்பாலுலவும்புயறேய் ... ※
வயங்காடகமதில்சூழ்தஞ்சைவாணன்மணங்கமழ்தார்ப் ......※
புயங்காதல்கொண்டணைந்தாளயலூர்தந்தபூமகளோ ... ()

(செவிலியெயிற்றியொடுபுலம்பல்.)

செருமகளேயும்புயத்தயலான்பின்செலவிடுத்தென் ※
னொருமகளேயென்றனையயிர்த்தேதன்புனையோவியம்போல்...※
வருமகளேதஞ்சைவாணன்றென்னூர்துன்னும்வன்சுரத்தோ ... ※
ரருமகளேயுனையாயவள்போனவதெனக்கே... ... ... ...()

(செவிலிகுரவொடுபுலம்பல்.)

இரவேற்குழலியிவ்வேதிலன்பின்செல்லவென்றுசொல்லாக் ...※
குரவேபரவுங்கொடியைக்கண்டாய்கொடிகோகனகந் ... ※
தரவேயெனவந்தசந்திரவாணன்றரியலர்போஞ் ... ※
சுரவேயநல்வழியேதனிப்போயவென்றேகையையோ ()

(சுவடுகண்டிரங்கள்.)

தொடுசிலைக்கானவரோடியவேற்றுச்சுவடிவையே ... ※
யடுசிலைக்காளையடியவையேயறிந்தோரறிய ... ... ※
விடுசிலைப்பார்புரக்குந்தஞ்சைவாணனிசைக்குருகப்.......... ※
படுசிலைப்பாலவைபதமிவையேவண்டுபாடுகவே ... ()

(செவிலிகலந்துடன்வருவோர்க்கண்டுகேட்டல்)

யானகம்போதவருந்தநம்போல்வனப்பெய்திவெய... ... ※
கானகம்போயினர்கண்டனிரோகற்பகாடவிசூழ் ... ※
வானகம்பார்டயில்வானவற்கீந்தருள்வாணன்றஞ்சைத் ... ※
தேனகம்போருகமாதனையாளுமொர்செல்வனுமே ... ... ...()

(அவர்புலம்பறேற்றல்-)
யான்கண்டவன்னவுமெண்ணருங்காதலினேகியவென் ※
மான்கண்டனகண்மயில்கண்டமாதருமாதருமந் ... ※
தான்கண்டதண்ணளிச்சந்திரவாணன்றரியலர்போங். ... ※
கான்கண்டமெய்குளிரப்பொய்கைகுழ்தஞ்சைகாண்பர்களே. ()
(செவிலிபுதல்வியைக்காணுதுகவலைகூர்தல்)
நாணினுந்தாரணிகற்புநன்றென்றுநயந்துமுத்தம், ... ※
பூணினுப்பாரமிதென்றுமென்பொன்னையிப்போதெனக்குச் ※
சேணினுஞ்சார்புகழ்வாணன்றென்மாறைமன்சோரலர்போய்... ※
கானினுங்காணவந்தோவரிதாலிந்தக்கானிடையே.........(௩௪௮)
கற்பொடுபுணர்ந்தகவ்வை-முற்றிற்று.
(மீட்சி,)
(தலைவிசேணகன்றமைசெவிலிதாய்க்குணர்த்தல்)
ஏடார்மலர்க்குழல்வல்லியையன்னையிந்நீவினையே. ... ※
ஞாடாவிடமில்லைஞாலத்தநல்வயினன்கமலக்- ... ※
காடார்பழனக்கழனிநன்றுகெடந்துதன்னூர் ... ... ※
வாடாவளமனைக்கொண்டுசென்றுரொருவன்ளலின்றே. (௩௪௯)
(இதுபிறசெய்யுட்கவி.)
(தலைவன்றம்மூர்சார்ந்தமைசாற்றல்)
நினையாதெனதிர்ப்பட்டநீடிருங்குன்றிதுநீகுடைந்த ... ※
சுனையாமதுமலர்ச்சோலைகளாமுலைவதுயவண்டன் ... ※
மனையாமிவையினிவாணன்றென்மாறைநயவாழ்த்தலர்போ ... ※
வினையாதெழுந்தருண்மானனையாய்நம்மெழினகர்க்கே, (௩௫௰)
தலைவிமுன்செல்வோர்தம்மொடுத்தல்.
பாங்கியர்க்குணர்த்துவிடுத்தல்.
புனையலரோதிலர்காதலர்தாயர்பொருமயிற்போ ... ※
இனைதுயர்யாதொன்றுமின்றிவெங்கானிகந்தியானுமம்பொன் ※
வனைகழலானும்வருவதெல்லாஞ்சென்றுவாணன்றஞ்சைத்......※
துனைவுடனேகுகின்றீர்சொல்லுமீரொன்றுணைவியர்க்கே ......()
(முன்சென்றோர்பாங்கியர்க்குணர்த்தல்.)
போதலர்ந்தல்லைமுனியுமெல்லோதிப்புனையிழைதன ........※
காதலன்பின்வரக்கண்டனம்யாங்கண்டல்வேலிமுந்நீர் ... ※
மாதலந்தன்னிருதோள்வைத்தவாணன்றென்மாறைவண்ணச் ※
சூதலர்ந்தொல்கவிம்மித்தரண்மாமுலைத்தோகையரோ ... (௩௫௨)
(பாங்கியர்கேட்டுநற்றாய்க்குணர்த்தல்.)
வாளேய்விழிநின்மயிலனையாடஞ்சைவாணன்வெற்பில்.........※
வேளேயனையவிடலைபின்னேகரமீண்டினிநம் ... ... ※

கேளேய்பதிவருமென்னநல்லோர்சொல்லக்கேட்டனமிந்......*
நாளேயனையநன்ஞளுளவோசென்றநாள்களிலே ... ()

(நற்ருய்கேட்டவனுளங்கோள்வேலனைவினுதல்.)

தென்மாறைநன்னகர்மன்னவன்வாணன்செழுந்தஞ்சைசூழ்...*
பொன்மாதிரத்துப்புலனுணர்வீர்சுரம்போய்வருவோ ... ... *
னென்மானையென்மனையிற்றருகோதன்னையின்றநற்ருய் ... ...*
தன்மாநகருக்குமோசொல்லுவீரொன்றுதானெனக்கே ... ...()

மீட்சிமுற்றிற்று.

(தன்மனைவரைதல்)

(நற்ருய்மணனயர்வேட்கையிற்செவிலியைவினுதல்.)

சீராருகாலனைச்செற்ருர்தியாகர்சிலம்பனையாய் ... ... *
நேராருகாளையையின்ருளுக்கீதுநிகழ்த்துவமோ ... *
வோராறுநால்வண்டுறைதழன்மானையுயர்மணஞ்செய் ... *
தீராருகாற்றெய்வநன்னீர்தெளிக்கநம்மில்லினினென்றே ... ()

(இதுபிறசெய்யுட்கவி.)

(செவிலிக்கிகுளைவரைந்தமையுணர்த்தல்,)

என்ஞமியம்புவதியாய்க்கினிநாமன்னையின்றுதம்மிற் ... ... ...*
கொன்ஞருநித்திலக்கோலைதநம்மாலைதக்கொடிநெடுந்தேர்க் ...*
கன்ஞடர்மண்கொண்டவாணன்றென்மாறையிற்காதலர்தா ... *
நன்ஞண்மணம்புணர்ந்தாரொன்றுதூதர்நவின்றனரே... ... ...()

(வரைந்தமைசெவிலிநற்ருய்க்குணர்த்தல்)

எனைக்கேளிருநின்றியற்றவங்கேமணவின்பமெய்தி ... ... ...*
யனைக்கேண்மைநண்ணியவண்ணல்பின்ஞகநம்மன்னையின்றிம் *
மனைக்கேவருமெனவந்துசொன்ஞர்தஞ்சைவாணன்வெற்பிற் *
சுனைக்கேழ்நனைக்கமழுநீர்க்குழலாய்சிலதூதரின்னே ... ... ()

(தலைவன்பாங்கிக்கியான்வரைந்த)

(மைநுமர்க்கிம்புசென்றென்றல்)

கோபுரஞ்சோலைக்கொடிமதின்மாடங்குலாவிமையோர் ... *
மாபுரம்போலுந்தென்மாறைவரோதயன்வாணன்வெற்பி ... *
னீபுரத்தேதந்துமாலைநிபங்கியாம்வரைநீர்மைபொய்செய் ... *
நூபுரஞ்சூழடியாய்சென்றுகூறுநுமர்தமக்கே ... ...()

(பாங்கிதானதுமுன்னேசாற்றியதுரைத்தல்.)

அன்னைக்கியம்பினஞண்டகையான்முன்னறிந்துதென்னன் ...*
றன்னைப்பணிந்துகுற்றேவல்செய்யாதுசமர்க்கெழுந்த ... *
மன்னைப்புறங்கண்டவாணன்றென்மாறைவரையிலெங்கள்...... *
பொன்னைப்புணர்ந்து நுங்கேண்முன்னர்நீபொன்புனைந்ததுவே.

(தன்மனைவரைதல் - முற்றிற்று.

(உடன்போக்கிடையீடு.)

(நீங்குங்கிழத்தி பாங்கியர்தமக்குத்தன் செலவுணர்த்திவிடுத்தல்.)
வளவேய்மிடைந்தவழிப்படர்வீர்செங்கைவாணன்றஞ்சைத் ... *
தளவேய்நகையென்றணைவியர்பாற்சென்றுசாற்றுமின்போர்க் *
களவேளனையவோர்காளைபின்போயினள்கான்பனிநீத் ... ... *
திளவேனில்வல்லிபெற்றுங்கெவ்வநீத்தெழிலெய்தியன்றே.....()

(தலைமகடன்செலவீன்றாட்குணர்த்திவிடுத்தல்)
வாயாரநுங்களைவாழ்த்துகின்றேன்றஞ்சைவாணன்வெற்பிற் ...*
சாயாதமாதவத்தாழ்சடையீரன்பர்தம்மொடின்றியான் ... *
சேயாறுதேர்மிசைச்செல்வதெல்லாமெங்கள்சேரியிற்சென்...*
றியாயாகியகொடியாட்கினிதாகவியம்புமின்னே ... ... ()

(நற்றாய்க்கந்தணர்மொழிதல்)
மருள்கொண்டசிந்தைதமலைகிழவோய்தஞ்சைவாணன்வெற்பில் *
வெருள்கொண்டமென்பிணைவென்றகண்ணாள்வென்றிவேல்வலங்
யருள்கொண்டநெஞ்சினொரண்ணல்பின்னேகன்றளைகல்வா [கை
னிருள்கொண்டகொண்டல்செல்லாவழிசூழியிருஞ்சுரத்தே... ()

(நற்றாயறத்தொடுநிற்றலிற்றவர்பின்சேறலை
த்தலைவிகண்டுதலைவர்க்குணர்த்தல்.
உவலைப்பதுக்கைமுரம்புசெல்லாமலுலகமங்கை ... ... *
தவலைத்தவிர்த்ததமிழ்த்தஞ்சைவாணன்றரியலர்போங் ... *
கவலைக்கடத்துச்சிலைத்திணைவோலிக்கும்பசுழித் ... .. ... *
துவலைப்படைக்கடன்றன்றல்பொற்றேர்வருங்குஞ்சூழ்கின்றதே ()

(தலைமகளைத்தலைமகன்விடுத்தல்)
ஆறலைவெஞ்சிலைக்கானவரேலன்கைபம்பொன்றிரு ... *
நூறலையஞ்சலைநண்ணிடையாய்நுமரோல்வர்முன் ... ... *
சேறலையஞ்சுவல்செல்லல்பைம்பூகச்செழும்பழுக்காய்த் ......*
தாறலைதண்டலைசூழ்தஞ்சைவாணன்றமிழ்வெற்பிலே ... ()

(தமருடன்செல்பவளவன்புற-நோக்கிக்கவன்றுற்றல்.)
ஏமாறெனவஞ்சுமேற்காத்தலினவ்விரவிபொற்றேர் ... *
வாமானின்வாழவனவாகபன்றூட்டஞ்சைவாணனன்னார் ...*
போமானதரிடத்தென்னையர்தோன்றப்புறங்கொடுத்த ... *
கோமான்மணிநெடுந்தேர்நுகம்பூண்டகுரகதமே ... ()

(உடன்போக்கிடையீடுமுற்றும்) (வரைதல்)
சென்றோன்மீண்டுவந்தந்தணனாயுஞ்சான்றோரையுமுன்
விட்டுவரைந்துகொண்டுழிக்கண்டோர்மகிழ்ந்துகூறல்,
சேலார்புனல்வையைசூழ்தஞ்சைவாணன்றென்மாறையினம்...*
வேலானைனைப்பிறர்வேட்டவர்யார்மணம்வேண்டுகிலீர் ... *

பாலாரமணியும்பாற்கடலானதுபங்கயக்கண் ... ... *
மாலாயினனிவனுந்திருவாயினன்மாதருமே ... ()

வரைதன்முற்றும்,

## இல்வாழ்க்கை.

### தலைவன்றலைவிமுன்பாங்கியைப்புகழ்தல்.

நின்மேலடுத்தபசலையின்காரணநின்றுணைவி ... ... *
என்மேலடுத்தவியல்பினன்றேபெற்றதேழுலகுந் ... ... *
தன்மேலடுத்தபுகழ்ந்தஞ்சைவாணன்றமிழ்க்கிரிறன் *
பொன்மேலெடுத்தனபொற்சுணங்கின்றபுணர்முலையே ... ...()

(தலைவனைப்பாங்கியன்வாழ்த்தல்)

தெரியாடகவிதழ்ப்பூங்கொன்றைவேணியுந்தேவியும்போற்... *
பிரியாதுறையப்பெறுகநிரார்பிறைமானுநெற்றிப் ... *
புரியாழ்கிளர்மொழிப்பூவையுநீயும்புணர்ந்தபல்கேழ் ... *
வரியார்சிலையண்ணலேதஞ்சைவாணன்றென்மாறையிலே.....()

(பாங்கிதலைவியைவரையுநாளளவும்)
(வருந்தாதிருந்தமையுரையாயென்றல்.)

கோங்கனன்மாமுகைக்கொங்கைநல்லாய்மணங்கூடுமெல்லை ...*
யாங்கனமாற்றியிருந்தனைநீயிபமாசயிலந் ... ... *
தாங்கனமாறத்தலம்புனைவாணன்றமிழ்த்தஞ்சைவாழ் ... *
பூங்கனமார்குழலாரலர்மாலைப்பொறைசுமந்தே ...()

(பெருமகளுரைத்தல்)

மைதோய்ந்தலர்ந்தமலர்த்தடஞ்சூழ்தஞ்சைவாணனொன்னார் ...*
மெய்தோய்ந்தசெந்நிறவேல்விழியாய்துயர்வெள்ளம்வெற்பர் *
கைதோய்ந்தளிப்பவசோகத்தவாய்நிறங்கால்வனவாய் ... *
நெய்தோய்த்தனதழையேபுணையாக்கொண்டுநீந்தினமே ... ... ()

(தலைவனைப்பாங்கிவரையநாளளவு)
(நிலைபெறவாற்றியநிலைமைவினாதல்)

வரையுமிந்நாளளவெவ்வாறுநீரோம்மடந்தைமுகை ... *
புரையுமென்கொங்கைபிரிந்திருந்தீர்முன்பொருப்பெடுத்தே...*
நிரையுமிஞ்ஞாலமுங்காத்தருடானன்பதாகையினீ ... *
டுரையுங்குயிலும்விடாதெழுமோசைசெவிமடுத்தே... ()

(இதுபிறசெய்யுட்கவி.)

(மன்றன்மனைவருசெவிலிக்கிளையன்புறவுணர்த்தல்)

வளங்கொண்டதஞ்சைவரோதயன்வாணன்றென்மாறையன்னு *
ளிளங்கொங்கைகொண்டுழுதீரங்கொண்மார்பின்முத்தேற்பவித்தி
விளங்கொண்பிறைநுதல்வேர்த்தந்துபோகம்விளைத்தன்புசே *
ருளங்கொண்டருந்துதலாலன்னையூரனுவப்புறுமே... (௱௭௨)

(பாங்கியில்வாழ்க்கைநன்றென்றுசெவிலிக்குணர்த்தல்)

சினவேய்சுளியுங்களிற்றண்ணல்வாணனென்மாறையினம் ... *
மனவேயகலல்குல்வல்லியன்னாண்மறையோர்முதலாஞ் ... *
சனவேதனைகெடத்தானங்களீதலிற்சாலவுநன் ... ... *
றெனவேநடக்கின்றதாதன்னைநாடொறுமில்லறமே. (௲௭௩)

(மணமனைச்சென்றுவந்தசெவிலி பொ)
(ற்றொடிகற்பியனற்றாய்க்குணர்த்தல்)

ஒன்றேநமக்குவந்தெய்தியநன்மையிடனெதிர்ந்தார் *
வன்றேன்மார்வென்றவாட்படைவாணன்றென்மாறையில்வாழ் *
நின்றேகைகற்பினிலைமையென்னாதெதிர்நின்றுவென்னிட் *
டன்றேவடக்கிருந்தாண்மடப்பாவையருந்ததியே. (௲௭௪)

(நன்மனைவாழ்க்கைத்தன்மையுணர்த்தல்.)

விண்மேலமரர்விரும்பமராவதிவெள்ளமுந்நீர் ... ... ... *
மண்மேலடைந்தன்னவாழ்க்கையதானதுவாணன்றஞ்சைப் *
பண்மேலளிமுரல்குங்குமத்தோளவர்பங்கயம்போற் ... *
கண்மேலருள்பெற்றவாழ்மடமாதர்கடிமனையே. (௲௭௫)

(செவிலிநற்றாய்க்கிருவர்காதலையுமறிவித்தல்)

நனையகத்தல்கியநாண்மலரோதிநயந்துறையு ... ... *
மனையகத்தல்லிடைவைகுதலாற்றஞ்சைவாணனென்னோர் ... *
வினையகத்தல்குதல்செல்லுவமோவுவ்வேந்தர்போற்றேர் ...
முனையகத்தல்கல்செல்லாதொருநாளுமுகிழ்நகையே (௲௭௬)

(இல்வாழ்க்கைமுற்றிற்று)

(பரத்தையிற்பிரிவு-- காதலன்பிரிவுழிக் கண்டோர்புலவிக்)
(கேதுவிதாமவ்விறைவிக்கென்றல்.)

மாறையர்காவலன்வாணன்றென்றஞ்சையில்வாழுதற்கிவ் ... *
வாறையர்காரணமாகுமென்றேகொங்கையானையுடன் ... *
சாறையர்வீதியரிப்பறையார்ப்பத்தயங்குகுழற் ... ... *
கூறையார்கூறைகொள்வான்வயலூரனைச்சூழ்ந்தனரோ (௲௭௭)

(தனித்துழியிறைவிதுனித்தழுதிரங்கல்.)

வன்போதணிதொங்கல்வாணன்றென்மாறைமகிழ்நர்நம்மே *
லன்போடுநன்னெஞ்சறிவறைபோகவழலுள்வெந்த .. *
பொன்போனிறங்கொண்டிரவுங்கண்ணீரும்புலர்வதுபார்த்... *
தென்போலவரிங்ஙனேயிமையாமலிருப்பவரோ ... ... (௲௭௮)

(ஈங்கிதுவென்னெனப்பாங்கிவினாதல்)

எம்மாதிரமும்புரவலர்தேடியிரந்துழல்வோர் ... ... *
தம்மாதுயரந்தணித்தருள்வாணன்றமிழ்த்தஞ்சைவாழ் ... *
நம்மாவியன்னவர்நாடோறுநாடொநல்கவுநீ ... ... ... *
விம்மாவருந்துவதென்பிரிந்தாரின்விளங்கிழையே (௲௭௯

(இறைமகன் புறத்தொழுக்கிறைமகளுணர்த்தல்)
தாராகநல்கினர்காரிகையாய்தஞ்சைவாணன்றன்னைச் ... ...*
சேராதவரொன்னத்தீவினையேனையச்செங்கண்வன்கட் ... *
காராகழனிக்கப்பினஞ்சாயக்கதழ்ந்துசெந்நெ ... ... ... *
லாராதயலிற்பஞ்சாயாருமூரரயலவர்க்கே ... ...()
(தலைவியைப்பாங்கிகழறல்.)
புனையலங்காரநங்கற்பியல்போற்றியும்போற்றருஞ்சீர் ... ... *
மனையருப்பாவித்தும்வாழ்வதெல்லாற்றஞ்சைவாணனன்று ... *
டனையவண்டார்குழலாரணங்கேநமக்கன்பரிந்நா ... *
ளினையதொன்றோர்வழியில்லாவுனையாடலியல்பல்லவே ... (௲அக)
(தலைவிசெவ்வணிந்து சேடியைவிடுப்புழியல்)
(வணியுழையர்கண்டழுங்கிக்கூறல்.)
வேளான்மரவிளக்கியவாணன்மின்றோர்நழல்சூழ் ... ... *
தாளான்வளங்கெழுதஞ்சையன்னீர்சங்கந்தந்தரன்னீர் ... *
தோளாமணியன்னதொல்குலவோடையிற்றோன்றியபூ... ...*
வாளாவலர்தொடுப்பார்க்கெங்ஙனேவந்துவாய்த்ததுவே...(௲அஉ)
(பரத்தையர்கண்டுபழித்தல்.)
படியொன்றுசாலியனையவர்சேரிப்படர்பவளக் ... *
கொடியொன்றுநீலமர்ந்ததுகாட்டக்கொடியவெம்போர் ... *
வடியொன்றுகூரிலைவேல்வல்லவாணன்றென்மாறையிற் போர் *
றொடியொன்றுதொண்மடவார்சேரிவாய்வந்துதொன்றியதே ...()
(பரத்தையருலகியலோக்கிவிடுத்தலிற்றலைவன்வரவு.)
கண்டுவந்துவாயில்கண்மொழிதல்)
வாருந்துபச்சிளநீர்முலையார்மதன்வாணன்றஞ்சை ... *
யாருந்தொழுத்தகுமெய்ப்பெருமாட்டிதன்னைவலின்றுற் ... *
சேரும்பரத்தையர்சேரியிலேசென்றசேடியைக்கண் ... *
டேருத்திவாப்புனலூரன்வந்தானின்றலகியற்கே ... (௲அச)
(தலைமகன்வரவுபாங்கிதலைவிக்குணர்த்தல்)
தள்ளாவளவயல்சூழ்தஞ்சைவாணன்றரியலர்போ ... *
லுள்ளாதுனைப்பணடகன்றனராயினுமுள்ளியிப்போ ... *
தெள்ளாதுவந்துன்கடையினின்றார்நம்மிறைவர்குற்றந் ... ...*
கொள்ளாதெதிர்கொள்வதேகுணமாவதுகோமளமே (௲அரு)
(தலைவனைத்தலைவியெதிர்கொண்டுபணிதல்.)
மருவிற்பெருநலமன்னுவதாந்தஞ்சைவாணன்வெற்ப ... ...*
வொருவிற்பசலையுருக்குவதாநமக்கூடலெவ்வா ... ... *
திருவிற்புருவவிளங்கொடியேயெய்துமெய்த்தில்லாத் ... *
திருவிற்புனைநறுந்தார்வரைமார்பர்திருமுனின்றே. (௲அசு)

(புணர்ச்சியின்மகிழ்தல்)

மன்னவர்காமநெடுங்கடல்வாணன்றென்மாறையன்ற ... ※
டொன்னலம்வார்முலைமத்தந்தழீஇத்தடந்தோளிணையாம் ... ※
பன்னகநாணிற்கடைந்திதழ்வார்கிளைப்பட்டநன்னி ...... ※
ரின்னமிழ்தார்ந்திமையோரமையாவின்பமெய்தினரே (௱௮௭)

வெள்ளணியணிந்துவிடுத்துழித்தலைமகன்வாயில்வேண்டல்.

என்பாற்குறையைநினைந்துமருதெதிர்கொள்ளவல்லே ... ... ※
தன்பார்புலவிதணிசென்றுனிதஞ்சைவாணன்வையை ... ... ※
மன்பாற்பரவும்புகழுடையனருமெளயனையா ... ... ※
யுன்பாற்புலவியுருள்வண்ணவார்குழலொண்ணுதலே (௱௮௮)

(தலைவிநெய்யாடியதிகுளைசாற்றல்)

மலர்புரையோர்கொண்டவாட்கணெங்கோமங்கைவாணன்றஞ்சைப்
பலர்புகழ்பாலற்பயந்துநெய்யாடினள்பாங்கெவர்க்கு.......[ப்
மலர்புனைநீடொளியாடியுட்பாவையன்றட்குளநீர் ... ... ※
புலர்புனலூரவென்றோதிருவுள்ளமிட்டோதுனக்கே ... ...()

(தலைவன்றன்மனத்துவகைகூறல்)

மையணிவேல்விழிவாணுதல்கூர்ந்ததுவாணன்றஞ்சைக் ... ... ※
கொய்யணிநாண்மலர்க்கொம்பரன்னாள்குழவிப்பயந்தே ... ※
நெய்யணிமேனியிலையவிபூண்டநிலையறிந்தே ... ... ...※
கையணிவால்வளைக்கண்டநாளினுங்காதன்மையே ... (௱௯௰)

(தலைவிக்கவன்வரல்பாங்கிசாற்றல்.)

ஏரார்புதல்வன்பிறந்தனன்வாழியவென்னுமுன்னே ... ... ※
வாரார்வளமன்னவந்துநின்றார்நங்குலவாணன்றஞ்சை ... ...※
நீராவிநீலநெடுங்கணமின்னேநின்னைநீட்பதல்லாற் ... ... ※
றேராதெழுதிருவரோபெரியோர்தஞ்சிறுவனையே... ... ...()

(தலைவியுணர்ந்துதலைவனொடுபுலத்தல்.)

வயங்கேழுலகும்புரக்கும்வாணன்றமிழ்மாறையன்ன... ......※
நயங்கேழ்பெருவளநல்குநல்லூரநயந்துநண்ணி ... ... ※
முயங்கேல்சிறுவற்பயந்தவென்மேனியின்முத்துவடந் ... ...※
தயங்கேரகமுழுதும்பழுதாயறுதாலினக்கே ... ... ... ()

(தலைவிபாணனைமறுத்தல்.)

தலையாகியதன்மையூரற்குவாணன்றமிழ்த்தஞ்சைசூழ் ... ※
மலையாகியமதில்வையைநன்னாட்டெங்கைமான்படுக்குங் ... ※
கலையாகுநின்னிசைக்கண்ணிக்கொண்டேதிரிகன்றுகன்னிப் ... ※
புலையாடக்கமெய்ம்மிற்போகப்போகப்புறங்கடையே ... ... (௱௯௩)

(வாயின்மறுக்கப்பட்டபாணன்கூறல்.)

நினக்கேதகுநின்னெடும்பனையூரனுநீயுமவன் ... ...※
றனக்கேதகுநவதமிழ்த்தஞ்சைவாணன்றடங்கிரிசூழ் ... ※

புனக்கேகயமன்ன நின்னடிபோற்றிப்புகன்றகன்று............※
மெனக்கேதகுமிலைகயாலெம்பிராட்டிபெறிந்தகல்லே ... ()

(விறலிவாயின்மறுத்தல்)

வண்புனலூர்வையைசூழ்தஞ்சைவாணனைவாழ்த்தலர்போற் ...※
கண்புனலூருமென்காதல்கண்டேநின்கடைத்தலைக்கே.........※
தண்புனலூரன்வந்தானென்றுசாற்றினைதானமுறப் ... ... ※
பண்புனலூர்களெல்லாம்பாடியேற்றுண்ணும்பாண்மகளே ...()

(விருந்தொடுவந்துழிப்பொறுத்தல்கண்டிறையோன்மகிழ்தல்)

புரவேயெதிர்ந்தநமக்குவிருந்தின்றுபோலவென்றும்............※
வரவேபுணர்ந்தநம்மாதவம்வாழியவாணன்றஞ்சைக் ... ...※
குரவேய்கருமுகிற்கொந்தளபாரங்குரும்பைகொங்கை ... ※
யரவேய்நுடங்கிடையாள்விழியூர்சுவப்பாற்றுதற்கே ... (௩௱௧௫)

விருந்துகண்டொளித்தவூடல்வெளிப்பட
நோக்கிச்சிறேதென்றவள்சீரடிதொழுதல்

தெரியோர்பொருட்டன்றுதேர்வின்றியூடல்செயிர்த்தவர்க்குக் ※
கரியோர்தெளித்தென்னகாரணங்காட்டுவர்காணுண்டுதேன் ... ※
வரியோர்தொடைப்புயன்வாணன்றென்மாறைமலர்த்திடுவே ...※
பெரியோர்பொறுப்பரன்றேசிறியோர்கள்பிழைத்தனவே......()

(இஃதெங்கையர்காணினன்றன்றென்றல்)

என்போனநெஞ்சமுநீருமென்பாதமிறஞ்சுதனுங்... ......※
கண்போலுமங்கையர்காணினன்றேகயன்மாதிரத்துத் ......※
திண்போதகந்தொழுந்திட்டியவாணன்செழுந்தஞ்சைசூழ்......※
வண்போதளவிதநீர்வையைநாட்டுறைமன்னவரோ ... ... ()

(அங்கவர்யாரையுமறியேனென்றல்)

மன்னும்புலவியைமாற்றியுந்தேற்றியும்வல்லவண்ண ... ...※
மின்னுந்தெளிந்திலையென்னேயென்னேசெய்கெனிதற்கு ... ※
முன்னும்படிந்துமுழுதுநன்னீர்க்கங்கைமுன்னுலறியு ... ※
மன்னம்படிசங்கொல்லோவுவராழிலாரணங்கே ... (௩௱௧௧)

(இது பிறசெய்புட்கவி,

காமக்கிழத்தியைக்கண்டமைபகர்தல்

போயேதெருவிற்றனிவிளையாடும்பதல்வற்புல்ல ... ※
நீயேதில்லையல்லைநின்மகனேயிவனீயுமவன் ... ...※
றாயேவருகெனச்சேயன்னவாணன்றமிழ்த்தஞ்சைமா.........※
னேயேயெனநிற்றலாணறித்தேன்றன்னையேங்கையென்றே ... ()

(தலைவியைப்பாங்கிதணித்தல்)

மாவாரணமன்னவாணன்றென்மாறைநம்மன்னர்நின்னைப்......※
பாவாய்பணிபவும்பார்க்கிலைநீபிடப்பாகமங்கை..................※

தாவாதசங்கரன்கங்கைதன்கொங்கைதழீஇயிதழிப் ... ... *
பூவார்சடைமுடிமேல்வைத்தபோதும்பொறுத்தனளே ... ...*
(தலைமகள்புலவிதணியாளாகத்தலைமகனூடல்)

தழங்கார்புனல்வையைசூழ்தஞ்சைவாணன்றனதருள்போற் [ற்
பழங்காதலெண்ணலென்னபதனெஞ்சேயிவள்பண்டுடைம்பொ
கழங்காடிடமுங்கடிமலர்க்காவுங்கடந்துபுள்ளும் ... ... *
வழங்காவழிநமக்கோர்துணையாய்வந்தமானல்லளே ... (௬௱௨)
(பாங்கியன்பிலைகொடியையெனத்தலைவனையிகழ்தல்)

மைந்நாண்மலர்த்தொடைவாணன் றென்மாறையெம்மன்னருவ
தந்நாண்முயங்கியமிழ்தெனவார்ந்தனிரார்வமுற்று ... ... [ற்
மூந்நாண்மதிவட்டமென்முலைமாதைமுனிந்துநஞ்செவி ... ...*
றிந்நாண்மிகவுவர்த்தீர்புலவாநிற்றிரொங்களையே ... ... (௬௱௩)

(ஆயிழைமைந்தனுமாற்றாமையும்வாயில்
களாகவரவெதிர்கோடல்)

வெள்ளம்பரந்தன்னவேட்கைசென்றூலுமிகப்பெரியோ... ...*
ருள்ளஞ்சிறியவர்மேற்செல்வரோவொளிர்கோமளஞ்செய் ... *
வள்ளங்கமலமலர்த்தஞ்சைவாணன்றென்மாறையன்னப் ... ... *
புள்ளம்புனல்வயலூராபுன்காமம்புகல்வதன்றே ... ...(௬௱௪)

(மணந்தவன்போயபின்வந்தபாங்கியோ
டிணங்கியமைந்தனையினிதிற்புகழ்தல்.)

இருமையிலேயும்பயன்களெல்லாந்தந்துனையன்றநமக் ... *
கொருமையிலேவந்துறத்தகைந்தான்மைந்த னெண்சுடர்போல்
வருமயிலேகொண்டுமாதடிந்தானன்னவாணன்றஞ்சைத் ... ...*
திருமயிலேயனையாய்புனலூரனைத்தேருடனே ... ...(௬௱௫)
(தலைவிதலைவனைப்புகழ்தல்)

கொண்டானிற்றுன்னியகேளிர்மற்றில்லைக்குறிப்பினென்று ...*
தண்டாதவர்சொன்னசால்புகண்டேன்றலைமேழ்புரக்கும்... ...*
வண்டார்மலர்ப்புயன்வாணன்றென்மாறைமகிழ்நர்முன்னு ... *
ணுண்டாகியபழங்கேண்மையிந்நாளுமொழிந்திலரோ ... ... ...()
(பாங்கிமனைவியைப்புகழ்தல்)

சிறந்தார்புகழ்தருந்தீம்புனலூரன்செய்தீமையெல்லா... ... ...*
மறந்தார்வமெய்துவணங்குதலாலிவள்வாணன்றஞ்சை ... ... *
திறந்தாரகையன்னதித்திலம்போலுநெடுங்குலத்திற் ... .*
பிறந்தார்நிறைந்தகற்போர்வடிவேபெற்றபெற்றியளே ... ... ()
பரத்தையிற்பிரிவுமுற்றும்.

[௰௬]

